# தெய்வத்திருப்புகழ்

(இறையருட் பாடல்கள்)



கவிஞர்

எம்.வி.குமார்

# தெய்வத் திருப்புகழ்

(இறையருட் பாடல்கள்)



திருமலை திருப்பதி தேவஸ்தான "சமய
நூல்கள் வெளியீட்டிற்கான உதவி"
திட்டத்தின் கீழ்
அவர்களின் நிதி உதவியுடன்
இந்நூல் வெளியிடப்படுகின்றது.

கவிஞர்
**எம். வி. குமார்**

# மங்கள வாழ்த்து

கவிஞர் குமார் அவர்களின் பாடல்கள் தெய்வீக மணம் பரப்பும் தேனமுதங்கள்! காதுக்கு இனிமை அளிப்பதோடு கருத்துக்கும் அருளமுதமூட்டும் சொல்நயம் படைத்தவை-அவருடைய கவிதைகள்! கவிஞரின் இறை இசைப் பாடல்கள் இலக்கியப் பண்புடன் கூடிய இனிய கவிதைகளாகும். அவருடைய பாடல்களில் அவரது கவிஉள்ளம் பேசுவதுடன் இறை உணர்வும் ஊட்டப்படுகின்றது.

இந்த இறை இன்பப் பாடல்கள் உள்ளங்களைத் தொடுவதுடன் இதயத்தில் மலர்ச்சியையும் உண்டாக்கும் தெய்வீகப் படைப்புகளாகும்.

அழியாத இறை உணர்வை நெஞ்சில் நிலைக்கச் செய்யும் இந்த "தெய்வத் திருப்புகழ்" பாடல்கள் பக்தி என்னும் பண்ணையில் ஆன்மீகத்துடன் கூடிய தெய்வீக உணர்வு என்னும் வித்தை விதைத்து அதில் மலர்ந்த 'அருள்' எனும் அமுத மலரை நமக்கு அளிக்கின்றன!

எமது அன்பு இளம் கவிஞர் வாழிய! வாழிய பல்லாண்டு!

'ஸ்ரீதேவி சரணம்'
44, தேரடி வீதி
மதுராந்தகம்-603 306

அன்பு
**தேவிதாஸன்**

Sri Ramajayam

Sangita Kalanidhi
**B. RAJAM IYER**
PRINCIPAL
The Teachers' College of Music
The Music Academy, Madras—600 014

☎ 454847
"SRI RAM NIVAS"
6, (Plot No.70), Fourth Street,
Nandanam Extension,
Madras—600 035

15 · 2 · 93

## முன்னுரை.

கலாநிதி. திரு. எம். ஆ. குமார் அவர்கள் ஏற்கெனவே 'தென்மலர்' என்ற பெயரில், பற்பல தெய்வங்கள் மீது இசைப் பாக்களை இயற்றி வெளியிட்டுள்ளார். அந்தப் புத்தகமும், திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிதியுதவியுடன் வெளியிடப்பட்டுள்ளது. அதை இசையரங்குகளில், பல இசைக் கலைஞர்களும் அன்புடன் பாடிவந்திருக்கின்றனர்.

தற்சமயம், 150 பாடல்களைக் கொண்ட தொகுப்பை நான் காண்கின்றேன். திரு. எம். ஆ. குமாருக்கு, இறைவனிடமுள்ள அவரது இனிய பக்தியாலும் தான் இந்தப் பாடல்களை இயற்ற முடிகின்றது என்பதில் ஐயமில்லை.

விநாயகர் முதல் எல்லா தெய்வங்கள் பேரிலும் மிகவும் சிறப்பாகவும், எளிய நடையிலும் அவரது பாடல்கள் அமைந்திருக்கின்றது. இந்தப் பாடல்களில் ராகங்களை நல்ல முறையில் இசையமைத்து பாடுவதற்கு சிறப்பாக அமைகின்றது. எதுகை மோனை அழகும் சிறப்பாக அமைகின்றது. இந்த தெய்வத் திருப்புகழை எல்லோரும் இசையமைப்புடன் இசைக் கலைஞர்கள் பாடவேண்டுமென்பது எனது அவா.

திரு. குமார் அவர்கள் இயற்றியுள்ள இந்த தெய்வத் திருப்புகழை எல்லோரும் பாடி பரவப் [illegible]

அன்புடன் [illegible].

# வாழ்த்துரை

கிருத யுகத்தில் தியானத்தினாலும், திரேதா யுகத்தில் வேள்விகளினாலும், துவாபரயுகத்தில் வழிபாடுகளினாலும், பெறும் நற்பேறு, கலியுகத்தில் கேசவனைப் பாடல்களினால் பாடிப் பரவுவதனால் எளிதாகப் பெறத்தக்கது என்பது ஆன்றோர்களின் அனுபவ அமுத வாக்கு.

உள்ளத்தின் ஆழத்திலிருந்து அமுத ஊற்றெனப் பெருகிப் பொங்கிவரும் இறையன்பினை இன்னிசைப் பனுவல்களாக வடித்தியற்றும் அருந்திறன் அனைவருக்கும் எளிதில் கை கூடுவதில்லை. அதற்கு இறையருள் துணை நிற்கவேண்டும்.

கருணையே வடிவான 'ஏரிகாத்த ராமன்' எழுந்தருளியிருக்கும் மதுராந்தகம் நகரினில், 'ஸ்ரீதேவி சரணம்' ஸ்ரீஸந்நிதானத்தில் தளராத் தவமியற்றிவரும் மகான் ஸ்ரீதேவிதாஸன் அவர்களால் கவிஞர் என அழைக்கப் பெறும் பேற்றினைத் திரு எம். வி. குமார் பெற்றிருப்பதே அவருக்குத் தெய்விகப் பாடல்கள் புனைந்து பாடும் ஆற்றல் இயல்பாய் அமைந்திருப்பதற்குத் தக்க சான்றாகும்.

ஏற்கனவே வெளியாகியுள்ள அவரது "தேன் மலர்" ஒரு தெய்வீக மலர்மாலை எனில், 'தெய்வீகத் திருப்புகழ்' என்னும் இந்நூல் இறைமையினைப் போற்றும் ஒரு புகழாரம் எனக் கூறுவது சாலப் பொருந்தும்.

இந்து சமயத்தின் பல்வேறு கடவுளரின் மீதும் ஆசாரியப் பெருந்தகைகளின் பேரிலும் இயற்றப் பெற்ற நூற்று ஐம்பது பாடல்களைக் கொண்ட

'தெய்வத் திருப்புகழ்'. வியாசர் சொல்ல விநாயகப் பெருமான் பாரதம் எழுதியது, வேலவன் வள்ளியை மணம் புரிய அவ்வேழமுகத்தோன் உதவியது, பாலமுருகன் தந்தைக்கே பிரணவப் பொருளினை உபதேசித்தது, தட்சன் வேள்வி போன்ற புராணச் சம்பவங்கள் இந்நூலில் குறிப்பிடப் பெற்றிருப்பது தனிச்சிறப்பு. ஐம்பூதத் திருத்தலங்கள் முருகனின் ஆறுபடை வீடுகள் ஆகியவை பற்றிய விவரங்கள், அம்பிகை, ஆலிலைப் பாலகன், அநுமன், ஆதிகேசவன், இராமன், ஐயப்பன், வேங்கடம் மேவிய பெம்மான் ஆகியோர் மீதான தோத்திரப் பாடல்கள், காஞ்சிமா முனிவர், இராகவேந்திர சுவாமி போன்ற தவ முனிவர்களின் பேரில் அமைந்துள்ள பாடல்கள் இந்நூலுக்கு இனிமை சேர்க்கின்றன.

எளிதாக இசையமைத்துப் பாடும் வகையில் பாடல்கள் அமைந்திருப்பது பாராட்டிற்குரியதாகும். இசைவாணர்கள் இவற்றைத் தமது இசை நிகழ்ச்சி களில் பாடுவது பாடலாசிரியருக்கு ஊக்கமளிப்ப தோடு கூட, பக்தியினைப் பரப்புவதற்கும் பெரிதும் உதவ முடியும்.

அன்புள்ளம் கொண்ட கவிஞர் எம். வி. குமார் அவர்களுக்கு எனது நல்வாழ்த்துக்களை வழங்கு வதில் மகிழ்ச்சியும் பெருமையும் கொள்கிறேன். அவர்தம் பக்திப் பனுவல் தொகுப்புகள் மேலும் பல வெளிவர 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டல்' ஏழுமலை நாயகன் அருள் புரிய உளமார வேண்டுகிறேன்.

திருப்பதி<br>16-2-1993

அன்பன்,<br>அ. நடராஜன்

# மதிப்புரை

"பாட்டின் திறத்தாலே வையத்தை பாலித்திட வேண்டும்" என்றான் பாரதி. எது பாட்டு? எந்தப் பாட்டு? இலக்கண எதுகை மோனை மட்டுமே பாட்டாகாது. உள்ளத்தின் உள்ளுணர்வு தெய் வீகத் தன்மை கவிகளாகி தானாக பொங்கிவரும் வெறும் சொற்கள் கூட பாட்டிலும் சக்தி வாய்ந்தது. அப்படி உள்ளுணர்வுடன் கிளம்பியது இனிய ராகங்களோடு கூடிய பாடல்களாகி விட்டால், சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்தது போலாகும்.

பாட்டு பாட்டு பொருளுணர்ந்த பாட்டு
காட்டுப் பறவை வீட்டுப்பசு கேட்டு—தலை
ஆட்டும் அழகே அழகு— குழந்தை பாம்பு

கேட்டு மகிழும் பாட்டு தெய்வீகப் பாட்டு-என்று பாட்டிப் பாடக் கேட்டதுண்டு. எனவே உள்ளன் பும் தெய்வீக உணர்வும் கொண்டு குமார் அள்ளித் தந்த இந்த அருள் பாட்டுகளை மக்கள் கேட்டு தெய்வீக இன்பம் பெற பாடகர்கள் — வித்வான்கள் இந்த "தெய்வத் திருப்புகழ்" புத்தகத்தை கொள்ள வேண்டுகிறான் !

அன்னையின் பாடலோடு ஆரம்பம் செய்த எம்.வி. குமார் அமுதூறும் ராகம் பாடல் அழகு இசைக்குப் பூணும் ஆரமாம் திருமுருகன் பாடல் இருபது திருநடனக் காவடிப் பாடல் குருவடிவாம்

சிவன் பாடல், குமரியன்னை புகழ்பாடல் அருணகிரி நாதர் பாடல் அருள்காஞ்சி முனிவர் பாடல் குரு ராகவேந்திரர் பாடல் ஸ்ரீராமகிருஷ்ணர் பாடல் அன்னை சாரதா பாடல் அருள் விவேகானந்தர் பாடல் மன்னுபுகழ் பாபா பாடல், அண்ணாமலை யோகி பாடல் இன்பமருள் மாலவன் பாடல் இருமுடியான் சபரி பாடல் கன்மம் வெல்ல வாயு குமாரன், கவலை மாற்றும் மதுராந்தகம் நன்மை செய்யும் நல்லபல பாடல் மலர்கள் தன்மை நிறை குமார் செய்தான் சகமுள்ளளவும் வாழ்க. இன்மை நீங்கி இனிய இசையால் இசைத்துப் பலர் வாழ்க வாழ்க மன்னுபுகழ் கவியரசி—மாதா கலைவாணி அருளால்! முன் வெளியீடு "தேன்மலர்" —பாமாலையை இறைவனும் தேவியும் அணிந்து கொண்டனர். இதோ இவற்றை 'தெய்வத் திருப் புகழ்' இசை மணியாரமாய் வருகிறது. எல்லோரும் "தெய்வத் திருப்புகழ்" அமுதம் பருகி நீடூழி வாழ்க! வாழ்க குமார்!

அன்புடன்

சென்னை-14 உங்கள் பித்துக்குளி முருகதாஸ்

15-2-93

# என்னுரை

வேண்டிய வரமருளும் ஸ்ரீ வெங்கடேசன் திருவருளால் இந்த "தெய்வத் திருப்புகழ்" அன்பர்களின் கரங்களை அலங்கரிக்கின்றது. இதிலுள்ள கவிதைகள் இசைவடிவம் பூண்டு இறைவலம் வந்து கொண்டிருக்கின்றன

இந்த 'தெய்வத் திருப்புகழும்' ஒரு தேன்மலரே! இதில் பூத்துநிற்கும் கவிதைகள் பிரபல இசைக் கலைஞர்களின் குரலிசை பெற்று நாளும் வலம் வந்து கொண்டிருக்கின்றன!

என்பால் அன்பு கொண்டு, என்னை என்றும் ஊக்குவித்து, எனக்கு உறுதுணையாய் இருந்து வரும் எனது அன்பு இனிய நெஞ்சங்களுக்கு, இந் நூல் ஒரு அன்புக்காணிக்கை!

எனது கவிதைகளுக்கு இசை உரமிட்டு என்னை பக்திப் பண்ணையில் தங்கள் இசையால் நாளும் வளர்த்து வரும், எனது அன்பு சகோதரர் கலைமாமணி Dr. சீர்காழி G. சிவசிதம்பரம் "தேன் மதுர திருப்புகழ் இசைவாணர்" திரு புரசை E அருணகிரி இன்னிசைச் செல்வர் திரு TKS

கலைவாணன், சகோதரி திருமதி மனோன்மணி சங்கர் ஆகியோரை இந்நேரத்தில் அன்புடன் நினைத்து எனது நன்றியினை காணிக்கையாக்கு கிறேன்.

மேலும் எனது மானசீக சங்கீத சத்குரு நாதர் அமரர் பத்மஸ்ரீ டாக்டர் சீர்காழி S. கோவிந்தராஜன் அவர்களையும், இசையுலகிற்கு என்னை அறிமுகப் படுத்திய அமரர் 'கந்தர்வகான ஜோதி' திரு K. வீரமணி அவர்களையும் இந்த நேரத்தில் போற்றி நிற்கிறேன்!

எல்லாவற்றிற்கும் மேலாக எனக்கு இசையார்வ மூட்டிய என் அன்னை, மங்கள வாழ்த்தளித்து எனது கவிதைகளை என்றும் பாராட்டும் ஸ்ரீ தேவிதாஸன் சுவாமிகள், எனது கவிதைகள் அச்சு வடிவம் பெற, வழிகாட்டியாயிருந்து, வாழ்த்துரை வழங்கியுள்ள திருப்பதி திருவேங்கடவன் கலைக் கல்லூரியின் முன்னாள் இயற்பியல் பேராசிரியர் பெரியவர் ஸ்ரீ அ. நடராஜன் அவர்கள், முன்னுரை வழங்கியுள்ள சென்னை மியூசிக் அகாடமி முதல்வர் ஸ்ரீ B. ராஜம் ஐயர், மதிப்புரை வழங்கியுள்ள ஸ்ரீ பித்துக்குளி முருகதாஸ் ஆகியோரை எனது நெஞ்சத்திலிருத்தி என்றும் போற்றுகிறேன்.

இந்நூல் நல்ல முறையில் வெளிவரக் காரண மான எனது சகோதரர்கள் ஸ்ரீ P. V. சிவராம தீக்ஷிதர் எம். வி. மணி சாஸ்திரிகள் ஆகியோருக்கும், இந்த இசைக் கவிதைகள் இசையுலகில் நிரந்தரவாசம் செய்யும் பொருட்டு நகலெடுத்து உதவி வரும்

எங்கள் இல்லத்து அன்புச் செல்வம் செல்வி ஸ்ரீ வித்யாவுக்கும், நூலை நல்ல முறையில் அச்சிட்ட ஜீவோதயம் அச்சகத்தாருக்கும் எனது நன்றிகள் என்றும் உண்டு!

இந்நூலுக்கு நிதியுதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தான 'சமயநூல் வெளியீட்டுக்குழு' அன்பர்களுக்கு எனது அகங்குளிர்ந்த நன்றியினை அர்ப்பணிக்கிறேன்!

இன்னிசை வளரட்டும் இன்பம் நிறையட்டும்

அன்புடன்
**எம். வி. குமார்**

# பொருளடக்கம்

# உனைப்போலே ஒரு தெய்வம்

உனைப்போலே ஒருதெய்வம் உலகிலுண்டோ-
அம்மா
எனைகாக்க உனையன்றி யாருமுண்டோ
-உனை

அழும்போது அமுதளிக்க அருகில்வந்தாய்-உன்
அன்பாலே எனைவளர்த்து அறிவுதந்தாய்
-உனை

அறியாத பருவத்தில் அணைத்தெடுத்தாய்-நல்ல
அன்பினை பொழிந்திடவே பிறப்பெடுத்தாய்
உயர்வவான நிலைபெறவே உழைப்பெடுத்தாய்-
-நான்
உருவாக உளமாற உன்னை கொடுத்தாய்
-உனை

தாயுன்னை படைத்திங்கு தான்சிறந்தான்-இறைவன்
தன்னருளால் உன்வடிவாய் தான்பிறந்தான்
அகிலத்தில் அன்னைக்கு நிகரில்லை-நல்ல
அன்பான ஒருதெய்வம் வேறில்லை
-உனை

# ராகங்களே சுக ராகங்களே

ராகங்களே சுக ராகங்களே-நல்ல
ஸ்ருதியோடும் லயத்தோடும் வாருங்களேன்

-ராக

சேருங்களேன் ஒன்று சேருங்களேன்-உயர்
தேனான இசைதன்னை தாருங்களேன்

-ராக

இசைக்கோயில் தனில்வாழும் ஸ்வரம்ஏழுதான்
-அந்த
இசைபுகழும் இறைவனின் மலைஏழுதான்
பிறப்பிலும் எண்ணிக்கை ஒரு ஏழுதான்-மறு
பிறப்பிலும் இசைநாடி மனம்வாழும்தான்

-ராக

மனதுக்கு மாமருந்து இசைதானென்று-மூன்று
மூர்த்திகளும் அழகாக சொன்னாரன்று
நயத்தோடு இசைதன்னை பயின்றால்நன்று-என்று
நாவாரச் சொன்னார்கள் பெரியோரன்று-அதனால்
-ராக

# குறையேதும் இல்லை ஐயா

குறையேதும் இல்லை ஐயா-சிவக்
குழந்தை ஆனைமுகன் அருகினில் இருக்கையிலே
நமக்கு
- குறை

துதிபாட நலமருளும் பாதாரம்-நம்
துயர்நீங்க அதுஒன்றே ஆதாரம்

-குறை

தூக்கியே வாழ்த்திட துதிக்கை இருக்கு-பெரும்
துன்பங்கள் பறந்தோடும் நம்பிக்கையை பெருக்கு
அனைத்திலும் முதலாகும் அழகு தெய்வம்-இந்த
அவனியில் அவன்தானே முதல் தெய்வம்

-குறை

தாய்தந்தை வலம்வந்து கனியைப் பெற்றான்-இந்த
தரணியில் தனக்காக தனியிடமும் பெற்றான்
அகவலை தினம்கேட்க அவன் வருவான்-நாம்
அனைவரும் நலம்பெறவே அருள் தருவான்

-குறை

# பிள்ளையார் பட்டி-வாழும்

பிள்ளையார் பட்டிவாழும் பிள்ளையாரப்பா-உந்தன்
பிள்ளைநாங்கள் வணங்குகிறோம் நீயும்பாரப்பா
கற்பகப் பிள்ளையார் உந்தன்பேரப்பா-உன்
பொற்பதம் பணியாத ஊருஏதப்பா

-பிள்ளை

யானிருக்கும் இடத்தில் செல்வமிருக்கும்-என்று
யாவருக்கும் பேதமின்றி சொன்னபிள்ளை நீ
தந்தையவன் சிவனை கரத்தினில்ஏந்தி-என்றும்
வந்தனை செய்துவரும் அன்புபிள்ளை நீ

-பிள்ளை

உள்ளத்தை உருக்கிடும் உந்தன்உருவம்-இந்த
உலகமே பணிந்திடும் அன்புஉருவம்
கனிவேண்டி வலம்வந்த சிறுபருவம்-எந்த
காலமும் போற்றிநிற்கும் எழிலுருவம்

-பிள்ளை

# சின்னக் குழந்தை
# சிங்காரக் குழந்தை

சின்னக் குழந்தை சிங்காரக் குழந்தை-நம்
சிந்தையள்ளும் விதத்தினிலே வந்த குழந்தை
சிரித்துப் பேசி விளையாடும் சிவனின் குழந்தை
-அழகு
சின்ன பிள்ளை போல ஆடும் சிறிய குழந்தை
-சின்னக்

நல்ல குழந்தை செல்ல குழந்தை-உயர்
கள்ளமிலா உள்ளமதில் வாழும் குழந்தை
அவ்வையிடம் அகவல்கேட்ட அரியகுழந்தை-நம்
ஆறுமுகன் முன்பிறந்த பெரியகுழந்தை
-சின்னக்

யானைமுகம் கொண்டுநம்மை காக்கும் குழந்தை
பானைவயிறு கொண்டுநம்மை பார்க்கும்குழந்தை
அவல்பொறி கடலைதனை கேட்கும் குழந்தை
-நமக்கு
ஆவல்தீர அருளைஎன்றும் அளிக்கும் குழந்தை
-சின்னக்

அரசுவேம்பு மரத்தடியில் அமரும்குழந்தை-பல
அற்புதங்கள் தனைபுரியும் அழகுகுழந்தை
தும்பிக்கையில் வாழ்த்திநிற்கும் தூய குழந்தை-நம்
நம்பிக்கையில் நலம் சேர்க்கும் நல்லகுழந்தை
-சின்னக்

# சுழி போட்டால் சுகமிருக்கு தெரியுமா

சுழிபோட்டால் சுகமிருக்கு தெரியுமா-பிள்ளையார்
சுழிபோட்டால் சுகமிருக்கு தெரியுமா

-சுழி

எழுத்ததனில் முதல்வடிவம் அவன்சுழியே-உனக்கு
என்றென்றும் அருள்வது திருவிழியே

-சுழி

ஓம்என்னும் திருவடிவம் தினம்வணங்கு-தினம்
ஓயாமல் அவனருளில் நீ இணங்கு
அவனைஎண்ணி செயல்நடத்த இடர்கள் வராது

-அழகு

ஆனைமுகன் பேரருளால் குறைகள் வராது

-சுழி

அன்னைதந்தை உலகமென்பது அவன்வாக்கு

-அதை

அன்புடனே நீயும்ஏற்க பெருகும் செல்வாக்கு
துதிகள்செய்து சேர்ந்துவரும் துயர்களைபோக்கு

-உனை

தொடர்ந்துவரும் பிறவியெனும் பிணியினை நீக்கு

-சுழி

# கணநாதன் புகழ் கேட்குது

கணநாதன் புகழ் கேட்குது-என்றும்
கனிவோடு மனம்நாடி கருத்தாகி மனமினிக்கும்
-கண

எங்குமே முதலாகி எளியோர்க்கு துணையாகி
ஏற்றங்கள் தனைதந்து எல்லாமும் தானாகும் -கண

மூலத்தின் வடிவாகி முக்கண்ணன் மகனாகி
ஞாலத்தின் முன்னின்று கோலங்கள் பலசெய்த
-கண

தாய்தந்தை உலகென்று தத்துவம் தனைச்சொல்லி
தனியாக வலம்வந்து கனியினை கைகொண்ட
-கண

வேலினை கைகொண்டு வேண்டிய வரமளிக்கும்
வேலனின் மனமினிக்க வள்ளியை மணம்முடித்த
-கண

அருந்தமிழ் அகவலினை ஔவையிடம் தான்கேட்டு
கனிவுடன் பாட்டிக்கு கயிலாயம் காட்டிநின்ற
-கண

அருகுடன் மலர்சூடி அழகுடன் அசைந்தாடி
அன்பர்கள் மனம்நின்று அன்புடன் வரமருளும்
-கண

# வல்லபை நாயகா வரம் தருவாய்

வல்லபை நாயகா வரம்தருவாய்-உயர்
நல்லவை தந்திட என்மனம் வருவாய்

-வல்லபை

உலகினில் முதலாகும் உன்னுருவே-தினம்
உன்னையே தொழுவோர்க்கு திருவுருவே

-வல்லபை

ஔவையின் அகவலோ உன்விருப்பம்-நல்ல
அருந்தமிழ் பாக்களும் உனைதுதிக்கும்
அன்னையும் தந்தையும் முதலென்றாய்-அதனால்
அகிலத்தில் முதலாகி நீ நின்றாய்

-வல்லபை

பார்த்திட பெருகிடும் பரவசமே-தினம்
பண்புடன் பணிவாக்கு நவரசமே
எம்மையே தந்தோமே உன்வசமே-நீ
எழிலாய் வந்திடுவாய் எம்வசமே.

-வல்லபை

# கணபதியை நினைத்து செயலினையே நடத்து

கணபதியை நினைத்து செயலினையே நடத்து-எந்த
காலத்திலும் துணைவருவான் அருளினையே
கொடுத்து
-கண

வேழமுகம் கொண்டு காத்திடுவான்-அன்பர்
வேதனைகள் தீர்த்து வாழ்த்திடுவான்
-கண

ஓங்காரம் என்பது அவனுருவம்-என்றும்
ஓதியே துதித்தார்க்கு திருவுருவம்
ஆடிடும் சிறுபிள்ளை அவன்வடிவம்-நலம்
நாடிடும் மனங்களுக்கு அருளுருவம்
-கண

பாரதம் எழுதிட பல்லினை ஒடித்தான்-அழகு
பன்னிருகை வேலவனின் திருமணம் முடித்தான்
ஒளவையின் அகவலிலே மனதினை கொடுத்தான்
-அதை
அனுதினம் நாம்பாட துயரினையே தடுத்தான்
-கண

அப்பம்பொறி கடலை அவனுக்குப்பிடிக்கும்-அதை
அன்புடன் தந்திடவோ மனம் துடிக்கும்
கனிவான தமிழ்பாட்டை கசடற படிக்கும்-மனம்
கற்பகக் கடவுளின் கழலடியை துதிக்கும்
-கண

# கணபதி என்றாலே காத்திடுவான்

கணபதி என்றாலே காத்திடுவான்-அவன்
கழலடி தொழுதாலே வாழ்த்திடுவான்
நினைத்ததும் கண்முன்னே அவன் வருவான்-நாம்
நினைத்தது எல்லாமே அவன் தருவான்

-கணபதி

நாயகன் சுழிதானே முதல் எழுத்து-தினம்
நம்பியே போட நல்ல சுபஎழுத்து
நலமுடன் வளம்கூட்டும் திரு எழுத்து-நம்
நாதனவன் சுழிநமக்கு பெரும்எழுத்து

-கணபதி

மண்ணிலே அவன்தானே முதல்தெய்வம்-நல்ல
மனங்களில் தினம்வாழும் எழில்தெய்வம்
அன்னையும் தந்தையுமே முதல்தெய்வம்-என
அவனிக்கு எடுத்துரைத்த தனிதெய்வம்

-கணபதி

பாரதம் எழுதிடவே பல்லொடித்தான்-இந்த
பாரதம் சிறந்திடவே வடிவெடுத்தான்
ஓமெனும் உருவாகி உளம்நிறைந்தான்-தினம்
ஓதியே துதிப்பவர்க்கு மனம் கனிந்தான்

-கணபதி

# நல்லதெல்லாம் தருவாய் நாயகனே

நல்லதெல்லாம் தருவாய் நாயகனே-அழகு
வல்லமை கரம்பிடித்த விநாயகனே

-நல்ல

கள்ளமில்லா உள்ளம் வாழ்பவனே-எம்
கருத்தினில் நிலைத்திருக்கும் தூயவனே

-நல்ல

நற்செயல் தொடக்கத்தில் நீ வருவாய்-உயர்
நல்லதெல்லாம் சேர்த்து நீதருவாய்
ஆயகலைகள் எல்லாம் உன்னடக்கம்- அதை
அன்புடன் வேண்டிட பெரும்புகழ் கொடுக்கும்

-நல்ல

ஆவணி சதுர்த்தியில் நீ பிறந்தாய்-ஔவை
அமுதத் தமிழகவல் நீ நிறைந்தாய்
உலகினில் முதல்தெய்வம் எனச்சிறந்தாய்-எம்
உளத்தினில் திருவாகி நீ இருந்தாய்

-நல்ல

# வலம்புரி நாயகா வரம்தருவாய்

வலம்புரி நாயகா வரம்தருவாய்-உன்னை
வலம்வர திருவருளை தினம்தருவாய்

-வலம்

மனமெனும் சோலையில் வசிப்பவனே-மன
மகிழ்வுடன் தரும் அமுதை புசிப்பவனே

-வலம்

வெள்ளை மலர்மாலை நீ சூடுவாய்-உயர்
வேழ முகத்தோடு எமைநாடுவாய்
கள்ளமில்லா உள்ளம் தனைதேடுவாய்-தேடி
காலமெல்லாம் அன்பர் மனம் கூடுவாய்

-வலம்

வாழ்த்திட துதிக்கை உனக்குண்டு-உனை
வணங்கிட பெருங்கருணை எமக்குண்டு
உலகினில் முதல்தெய்வம் எனக்கண்டு-தமிழ்
உயர்வாய் போற்றிடுமே துதிகொண்டு

-வலம்

# தில்லைநாதன் திருமகனே ஐங்கரனே

தில்லைநாதன் திருமகனே ஐங்கரனே-உயர்
தொல்லையெல்லாம் தீர்ப்பாய் வேழமுகனே-தி

அல்லலை களைந்திடுவாய் அற்புதனே-அழகு
ஆறுமுகன் முன்பிறந்த பொற்பதனே

-தில்லை

வணங்கிடும் அன்பருக்கு வாழ்வளிப்பாய்-உனை
வாழ்த்தியே துதிப்பவர்க்கு நீ இனிப்பாய்
பாலுடன் தேன்கலந்து நீ குளிப்பாய்-ஔவை
பாட்டியின் ஆவலிலே நீ களிப்பாய்

-தில்லை

வெள்ளை மனமெல்லாம் உன்வீடு-அழகு
வெள்ளைமலர் மாலைதனை நீ சூடு
அன்பரைக் காப்பதெல்லாம் உன்பாடு-தினம்
அருளோடு பொருள்தருமே திருநீரு

-தில்லை

அருகுடன் மலர்சேர்த்து அலங்காரம்-அதை
அன்புடன் செய்தால்போரகும் அகங்காரம்
ஓமெனும் ஓர் எழுத்தில் ஓங்காரம்-அதில்
உயர்வாய் நிறைந்திருப்பாய் ஒய்யாரம்

-தில்லை

# முருகனுக்கு முன்னவனே முதல்தெய்வமடா

முருகனுக்கு முன்னவனே முதல்தெய்வமடா-இந்த
மூவுலகம் வணங்கிநிற்கும் அழகுதெய்வமடா

-முரு

வேண்டுதலை தீர்த்துவைக்கும் வேழமுகமடா-நம்
வேதனைகள் போக்கவேறு தெய்வம் யாரடா

அன்னைதந்தை உலகமென்று சொல்லிநின்றதடா-பல
அற்புதங்கள் தனைபுரியும் அன்பு தெய்வமடா

-முரு

மாங்கனியை பெற்று நின்ற மழலை பாரடா-நம்
மனதினிலே கோயில்கொண்ட அழகன்தானடா
ஆனைமுகம் கொண்டு உடலை அசைக்கும்பாரடா-நமக்கு
அருளை என்றும் அள்ளி வழங்கும் அழகைப்பாரடா

-முரு

அவனியிலே ஆயிரமாய் கோயிலுண்டடா-அவை
அரசமரம் வேப்பமரம் அடியில்தானடா
அனுதினமும் அவன்கோயில் சுற்றுவாரடா-அன்பர்
அருளைவேண்டிய திருவடியை பற்றுவாரடா

-முரு

# காத்திடும் கடவுளே கணநாதா

காத்திடும் கடவுளே கணநாதா-எந்த
காலமும் உனை நினைய ஒருவரம்தா

-காத்திடும்

மண்ணிலே உன்கோயில் தினம் மணக்கும்-உன்
மகிமையை பாடிட நாவினிக்கும்

-காத்திடும்

அன்னையும் முதலென்றாய் அப்பனும் முதலென்
றாய்
அனைத்திலும் முதலாகி அன்புடன் நலம்தந்தாய்
அருகினை தலைசூடி அன்பரின் மனம்நின்றாய்
அப்பமுடன் பொறிகடலை வேண்டியே நீ உண்டாய்

-காத்திடும்

அற்புதங்கள் நிகழ்த்தும் உன் திரு சன்னதி
அனுதினம் வலம்வந்தால் மனதுக்கு நிம்மதி
அடியார்க்கு விருந்தாகும் உன் திரு சாட்சி
அகிலத்தில் சிறந்ததய்யா உன்னருள் ஆட்சி

-காத்திடும்

# அற்புதங்கள் புரிவாய் ஆனைமுகனே

அற்புதங்கள் புரிவாய் ஆனைமுகனே-உயர்
அன்பே உருவான ஐங்கரனே

-அற்புத

அன்னையாம் உமையவளின் முதல்மகனே-இந்த
அகிலத்தில் நலம்தருவாய் திருமகனே

-அற்புத

பாரதம் எழுதிட பல் ஒடித்தாய்-வரும்
பவவினை அனைத்தையும் நீதடுத்தாய்
முருகனின் திருமணம் தனைமுடித்தாய்-உன்னை
முதல்வனாய் வணங்கிட எனைபடைத்தாய்

-அற்புத

ஓமெனும் வடிவம் உன்னுருவம்-அதை
ஓதியே உணருது என்பருவம்
ஔவையின் அகவலை மனம்படிக்கும்-தினம்
அன்புடன் வேண்டிட துயர்துடைக்கும்

-அற்புத

# கற்பகக் கடவுளென்றால் கணபதிதான்

கற்பகக் கடவுளென்றால் கணபதிதான்-அழகு
பொற்பதம் நமக்கருளும் குணநிதிதான்.
அன்புடன் வருவோர்க்கு அருள்நிதிதான்-என்றும்
அழைத்ததும் உடன்வருவான் நவநிதிதான்
-கற்பக

பார்த்தால் காட்சிக்கு சிறுபிள்ளைதான்-இந்த
பாரினில் முதல்பிள்ளை சிவன் பிள்ளைதான்
முருகனின் மணம்முடித்த பெரியபிள்ளைதான்-புன்
முறுவலில் பூத்துநிற்கும் அரியபிள்ளைதான்
-கற்பக

ஔவைக்கு அகவலினை தந்தபிள்ளைதான்-நல்ல
அருந்தமிழ் பாக்களிலே வந்தபிள்ளைதான்
சித்திபுத்தி தனைமணந்து சிறந்தபிள்ளைதான்
நமக்கு
புத்தியுடன் பக்திதர பிறந்தபிள்ளைதான்
-கற்பக

# அன்னைக்கும் தந்தைக்கும் முதலானவா

அன்னைக்கும் தந்தைக்கும் முதலானவா-இந்த
அவனியே தினம்போற்றும் குருவானவா
ஓமெனும் பிரணவத்தின் வடிவானவா-நல்
ஓங்கார நாதத்தில் திருவானவா

-அன்னைக்கும்

ஊரெங்கும் உன்கோயில் உருவானது-அதில்
உன்ரூபம் ஒன்றேதான் கருவானது
என்னாளும் உன்நினைவே அருளானது-உன்
பொன்னான திருமுகமோ பொருளானது

-அன்னைக்கும்

பிள்ளைகள் வணங்கிவரும் பிள்ளையாரப்பா-மனத்
தொல்லைகள் நீக்கயாரும் இல்லையப்பா
அன்புடன் அருள்வதில் வள்ளலப்பா-உனக்கு
ஆயிரம் கோயில்கள் உள்ளதப்பா

-அன்னைக்கும்.

அப்பமும் பொறிகடலை ஆவலப்பா-என்றும்
தப்பாமல் துதிப்போர்க்கு காவலப்பா
பாரதம் நீ எழுதி தந்ததப்பா-இந்த
பாரதம் உனைபோற்றி நின்றதப்பா

-அன்னைக்கும்

# கனிவாய் அருள்வாய் கணபதியே

கனிவாய் அருள்வாய் கணபதியே-ஞான
கனியினை கரம் பெற்ற குணநிதியே

-கனிவாய்

அனைத்துக்கும் முதலான அதிபதியே-இந்த
அவனியில் திருவான சுகபதியே

-கனிவாய்

ஔவையின் தமிழ் பாடல் அகவலய்யா-அதை
அன்புடன் கேட்பதிலே ஆர்வமய்யா
ஓ மெனும் உன்வடிவம் பெரியதய்யா-அது
ஓதி உணர்த்திட அரியதய்யா

-கனிவாய்

ஞாலம் என்பது உன்வீடு-உயர்
ஞானம் பெறுவதும் பெரும்பாடு
பாரதம் என்பது பெரும்ஏடு-அதை
பணிவுடன் எழுதினாய் பண்போடு

-கனிவாய்

# நாயகனைத் தொழுவாய் நலம் பெறுவாய்

நாயகனைத் தொழுவாய் நலம் பெறுவாய்-நீ
நலமெலாம் தினம்வேண்டி உனைத் தருவாய்
-நாயகனை

உமை சிவன் உலகமென்று கனியடைந்தவன்-
உடன்
உண்மையாய் வலம்வந்து உயர்ந்து நின்றவன்
-நாயகனை

ஆனைமுகம் கொண்ட அழகுபிள்ளை-நம்
ஆறுமுகன் தனக்கு மூத்தபிள்ளை
உமைசிவன் உளம் கவர்ந்த ஆசைபிள்ளை-இந்த
உலகினை காக்கவந்த அரியபிள்ளை
-நாயகனை

அப்பமொடு பொறிகடலை தரவேண்டும்-அவன்
ஆலயம் தனைவலம் வரவேண்டும்
அவனருள் அனுதினமும் பெறவேண்டும்-பெரும்
அன்பாலே தனைமறக்கும் நிலைவேண்டும்
-நாயகனை

# சரவண பவகுக ஷண்முகனே

சரவண பவகுக ஷண்முகனே-என
சந்ததம் பாடநலம் தந்தவனே
வள்ளியம்மை தெய்வானை மன்னவனே-எழில்
புள்ளிமயில் மேலமர்ந்த சின்னவனே
-சரவண

ஔவையின் தமிழ்தன்னில் மகிழ்பவனே-திரு
அருணகிரி திருப்புகழில் நிறைபவனே
ஆறுபடை டதனில் உறைபவனே-நல்ல
ஆறெழுத்து மந்திரமாய் திகழ்பவனே
-சரவண

தெள்ளுதமிழ் பாடலிலே மனமினிக்கும்-உன்னை
தேடிவரும் மாந்தருக்கு வாழ்வினிக்கும்
அலங்காரம் அனுபூதி புகழ்மணக்கும்-அது
அனுதினம் உனைப்பாடி தனைமறக்கும்
-சரவண

ஆயிரம் ஆயிரம் அடியார்கள்-வந்து
அன்புடன் திருவடியை புகழ்வார்கள்
வேலுடன் மயில் கண்டு பணிவார்கள்-வடி
வேலவனே உன்னருளில் மகிழ்வார்கள்
-சரவண

# ஆறுமுகன் கேட்டினிக்கும்

ஆறுமுகன் கேட்டினிக்கும் ஆறெழுத்து மந்திரம்
-அதை
அன்புடன் தினம்பாட அருள் தரும் மந்திரம்
-ஆறுமுகன்
கந்தனவன் கனிவோடு கேட்டிருக்கும் மந்திரம்
-உயர்
கற்பகமாய் இனித்திடுமே கருணைமிகு மந்திரம்
-ஆறுமுகன்

தந்தைக்கு குருவான சரவண மந்திரம்-இந்த
தாரணி போற்றிவரும் தயைநிறைமந்திரம்
ஒருமையுடன் ஓதிடவே உயர்வுதரும் மந்திரம்-நல்
ஓங்காரம் தனில்அன்பாய் ஊறிநிற்கும் மந்திரம்
-ஆறுமுகன்

நக்கீரர் பாடிநின்ற ஆற்றுப்படை மந்திரம்-நம்
நாவினிலே இசையாகி நலம்தரும் மந்திரம்
அருணகிரி பாடிநின்ற திருப்புகழ் மந்திரம்-இந்த
அகிலத்தை காத்துநிற்கும் அற்புத மந்திரம்
-ஆறுமுகன்

# திருமுருகன் திருப்புகழை
# தினமும் நீ பாடு

திருமுருகன் திருப்புகழை தினமும் நீபாடு-உயர்
தீந்தமிழில் தீஞ்சுவையை கொண்ட அழகுஏடு
ஆறுமுகன் புகழைப்பாடும் ஆறுபடை வீடு-அந்த
ஆறுமுகன் திருவருளை அனுதினமும் தேடு
-திருமுருகன்

வேலும்மயிலும் சேர்ந்துவேலன் புகழைப் பாடுது
-வடி
வேலனவன் கருணைவேண்டி நாளும் தேடுது
அனுபூதி அலங்காரம் சுவையை நாடுது-கந்தன்
அற்புத கோலம் காண கோயில் கூடுது
-திருமுருகன்

வேல்பிடித்து முருகன்நமது வேதனை தீர்ப்பான்-வடி
வேலில்நின்று அருளைஎன்றும் நம்மிடம் சேர்ப்பான்
அன்புடனே வாழ அன்பர் மனதினை கேட்பான்
-தினம்
ஆடிவரும் காவடியை ஆசையுடன் பார்ப்பான்
திருமுருகன்

# தங்கமயில் முருகனுக்கு தமிழ்மணிமாலை

தங்கமயில் முருகனுக்கு தமிழ்மணிமாலை-தந்து
தாள்பணிந்து வணங்குவதே தினம் ஒரு வேலை
-தங்கமயில்
வேலும்மயிலும் பணிந்திடவே வரும்தினம்காலை
-வடி
வேலனருள் வேண்டி ஒதும் திருப்புகழ் நூலை
-தங்கமயில்

கந்தனவன் கோயில்கொண்ட மாமலர்ச்சோலை
-அங்கே
காலைமாலை ஏடத்திடுவான் அற்புதலீலை
சொற்பதங்கள் சேர்ந்ததமிழ் இசைமணிமாலை-உயர்
நற்பதங்கள் நலமளிக்கும் அருள் திருமாலை
-தங்கமயில்

அருளைஅள்ளி தந்திடுமே ஆறுபடைவீடு-மன
ஆறுதலை தருவதுவும் அருள் திருவீடு
அன்புடனே புகழைப்பாட நமக்கில்லைகேடு-நமை
அனுதினமும் வாழ்த்துவதும் அவனதுபாடு
-தங்கமயில்

# நான்பாடும் பாடல்
# நீ தந்த கவிதை

நான்பாடும் பாடல் நீ தந்த கவித-என்
நாவோடு நீ வளர்ப்பாய் தேனான அமுதை
-நான்பாடும்
என்பாடல் கேட்டு உன்வாசல் திறக்கும்-அதில்
எளிதாக நீதந்த தமிழ்நன்கு சிறக்கும்

வேலோடு மயில்கூடி உன்வீட்டில் இருக்கும்-வடி
வேலா உன் புகழ்கேட்டால் துயரெல்லாம் பறக்கும்
-நான்பாடும்
சந்தங்கள் உறவாடும் நிலைவர வேண்டும்-என்
சொந்தங்கள் நீயாக வரம்தர வேண்டும்

எதுகையும் மோனையும் எழிலாக வேண்டும்-உனை
எந்நாளும் பணிகின்ற நிலைஎனக்கு வேண்டும்
-நான்படும்
முருகா உன் பெயர் சொன்னால் அழகு கொஞ்சும்-
-நல்ல
மூன்றுதமிழ் ஒன்றாகி உன்னருகே கெஞ்சும்

தமிழ்பாடும் என்னருகே வினைவரவே அஞ்சும்-என்
தமிழ்தெய்வம் உன்பதமே எனக்கருளும் தஞ்சம்
-நான்படும்

# பழனிமலையில ஒரு குழந்தை நின்றிருக்கிறான்

பழனிமலையில் ஒருகுழந்தை நின்றிருக்கிறான்-அழகு
பழகுதமிழில் பாடல்களை கேட்டுநிற்கிறான்
ஆண்டியென கோலம்கொண்டு அருளைத்
தருகிறான்-தன்னை
அண்டிவரும் பக்தர்களை காத்துவருகிறான்
-பழனிமலையில்

ஆவினன் குடிமலையில் அற்புதங்கள்-தினம்
அன்புடனே தருவானே பொற்பதங்கள்
அருணகிரி பாடல்களில் சொற்பதங்கள்-அவை
ஆறுமுகன் தான்தந்த நல்வரங்கள்
-பழனிமலையில்

விதவித விளையாட்டு சித்தனவன்-உயர்
வெண்ணீரில் நிறைந்திருக்கும் பக்தவனவன்
பித்தனுக்கு பிறந்த பிள்ளையவன்-அந்த
பித்தனுக்கும் பாடம் சொன்ன மன்னனவன்
-பழனி மலையில்

பங்குனியின் உத்திரத்தில் திருக்கோலம்-பழனி
பாங்குடன் ஒளிவீசும் எழிற்கோலம்
தங்கரதம் பவனிவரும் திருக்காட்சி-அது
சந்ததம் மனம்நிறையும் பெருங்காட்சி
-பழனி மலையில்

# வடிவேல் நம்மை வாவென்று அழைக்கும்

வடிவேல் நம்மை வாவென்று அழைக்கும்
வல்லக் கோட்டையிலே -நமக்கு
வரம்தரும் வள்ளல் வரதன் வாழ்வான்
உள்ளக் கோட்டையிலே

-வடிவேல்

தமிழின் சுவையாய் தவழ்ந்து வருவான்
திருப்புகழ் பாட்டினிலே -தினம்
தணியா மோகம் கொண்டே கவியை
தருவான் ஏட்டினிலே

-வடிவேல்

கோடை நகரினில் மயில்கள் ஆடிடும்
அழகே அற்புதமே -அங்கே
கோபுர வடிவினில் நின்றே முருகன்
அளிப்பான் பொற்பதமே -வடிவேல்

சந்தத் தமிழிசை கேட்டே கந்தன்
சொந்தம் கொண்டிடுவான்-அழகு
சந்தண காப்பினில் நிறைந்து அன்பாய்
சந்ததம் வாழ்த்திடுவான்

வடிவேல்

# வாருங்கள் வல்லக்கோட்டை செல்வோம்

வாருங்கள் வல்லக்கோட்டை செல்வோம்-துயர்
தீருங்கள் அவன் நாமம் சொல்வோம்
அனுபூதி அலங்காரம் கொள்வோம்-நம்
அகங்காரம் தனையென்றும் வெல்வோம்
-வாருங்கள்

அழகாக எழில்கொஞ்சும் திருக்கோயில்-உயர்
அடியார்கள் தினம் சேரும் திருவாயில்
ஓங்கார மணி இசைக்கும் நாதம்-அது
ஓராறு திருமுகனின் வேதம்
-வாருங்கள்

வடிவேலே அவன் கையின் துணையாகும்-எழில்
வளம்பொங்கும் திருமுகமே இணையாகும்
திருப்புகழே நமக்கென்றும் அணையாகும்-தினம்
திகட்டாத அமுதாகி நமையாளும்
-வாருங்கள்

# வல்லக்கோட்டை முருகா வடிவேலை தாங்குமழகா

வல்லக்கோட்டை முருகா வடிவேலை தாங்குமழகா
-என்
உள்ளக்கோட்டை அமர்வாய் உன்உயர்ந்த பாட்டை
தருவாய்
-வல்லக்

நீலமயிலில் வந்தாய் என்றும் நிலைக்குமின்பம்
தந்தாய்-எழில்
கோலம்கொண்டு நின்றாய் மனக்கோபம் தணிந்து
சென்றாய்
-வல்லக்

வள்ளிகுறத்திதன்னை உடன்அள்ளி அணைத்து
நின்றாய்-
-தினம்
துள்ளி ஓடி வந்தே அன்பர்துன்பம் நீக்கிநின்றாய்
போரில் நின்றசூரன் உடல்மாய்த்து நீயும்வென்றாய்-
இந்த
பாரில் உயர்ந்து நின்றே அருளைவாரி வழங்கு
-கின்றாய்
-வல்லக்

படைவீட்டில் தனில்நின்று அழகானாய்-அந்த
பரமனுக்கே பாடம்சொல்லி குருவானாய்
பழனிமலை மீதமர்ந்து பழமானாய்-ஔவை
கிழவிதந்த தமிழ்பாட்டில் தனைமறந்தாய்
-வல்லக்

# ரத்தினகிரி பாலமுருகன் தேரில்வருகிறான்

ரத்தினகிரி பாலமுருகன் தேரில்வருகிறான்-பல
ராகங்களில் தேனிசையை அள்ளி தருகிறான்
-ரத்தினகிரி

ஆறுமுகன் வீற்றிருக்கும் அழகுசன்னதி-அங்கே
அன்புடனே நிலைத்திருக்கும் பெரும் நிம்மதி
-ரத்தினகிரி

பாலமுருகன் உண்மைஅன்பில் திளைத்திருக்கிறான்
-அழகு
பாலனாக கோலம்தாங்கி நிலைத்திருக்கிறான்
அற்புதங்கள் பலபுரிந்து உயர்ந்திருக்கிறான்-இரு
பொற்பதங்கள் நமக்களித்து கனிந்திருக்கிறான்
-ரத்தினகிரி

மலையின்மீது மன்னனாக வீற்றிருக்கிறான்-பல
கலைகளெல்லாம் தந்திருந்து சிரித்திருக்கிறான்
வள்ளிதெய்வ யானையுடன் காட்சிதருகிறான்
-பெரும்
வள்ளலாக அருளைதந்து பவனிவருகிறான்
-ரத்தினகிரி

# ரத்தினகிரிவாழும் அற்புத தெய்வமே

ரத்தின கிரிவாழும் அற்புத தெய்வமே-உன்
பொற்பதம் எமக்கருள்வாய் சத்திய தெய்வமே
-ரத்தின

அனுதினம் உனைகாண பேரானந்தம்-அதனால்
அன்புடன் நிலைத்திருக்கும் அருளானந்தம்
-ரத்தின

எழில்கொஞ்சும் கல்தேரில் நீ இருப்பாய்-என்றும்
ஏற்றம் எமக்கருள துணையிருப்பாய்
திருப்புகழ் அனுபூதி தந்திருப்பாய்-நல்ல
திருநீறில் மருந்தாக வந்திருப்பாய்
-ரத்தின

அடிமையை ஆட்கொண்டாய் பாலமுருகனே-உன்
அடியினை தந்துநின்றாய் ஞானமுருகனே
வேலினை கைகொண்ட வேல்முருகனே-நால்
வேதமாய் நின்றருள்வாய் கோலமுருகனே
-ரத்தின

# பால முருகன் சன்னதி

பால முருகன் சன்னதி-தினம்
பார்க்க மனதில் நிம்மதி
பாலனவன் பெரும் நிதி-நல்
பரிவுகாட்டும் அருள் நிதி

-பால

ரத்தின கிரி அற்புதம்-இசை
ராகம் தரும் பொற்பதம்
வேலும் மயிலும் அற்புதம்-அங்கே
வேண்ட வரும் நற்பதம்

-பால

அழகின் உருவில் கல்ரதம்-அதில்
ஆறுமுகன் மலர்ப் பதம்
அருளை சேர்க்கும் ஒருவிதம்-நம்
அழகன் காட்சி பலவிதம்

-பால

# செந்திலில் அலையாடி

செந்திலில் அலையாடி
செந்தமிழ் புகழ்பாடி
சந்ததம் உனை நாடுமே-முருகா
சரணங்கள் தனைபாடுமே.

- செந்திலில்

கனிக்காக சினம்கொண்டு
கையினில் வேல்கொண்டு
மயிலேறி மலைசென்றவா-முருகா
மனம்வாழும் எழில்மன்னவா.

- செந்திலில்

கயிலை மலைநாதன்
காதினில் கனிவோடு
கருத்துடன் பொருள்சொன்னவா-முருகா
கருணையை தினம்தந்தவா.

- செந்திலில்

நெஞ்சினில் நிறைவோடு
கொஞ்சிடும் தமிழாலே
நித்தமும் உனைவேண்டுவேன்-முருகா
நிர்மல மனம்வேண்டுவேன்.

- செந்திலில்

# செந்தூரின் கடலலைகள் சங்கீதம் தினம்பாடும்

செந்தூரின் கடலலைகள் சங்கீதம் தினம்பாடும்
சரவணன் பெயர்சொல்ல சந்தங்கள் உறவாடும்.

-திருச்செந்தூரின்

முத்தமிழ் இசைபாடி முருகனின் பதம்சேரும்
முன்வினை பயம்நீக்கி அவன்புகழ் தினம்கூறும்.
-திருச்செந்தூரின்

வேல்வந்து எதிர்நின்று வேலனை துதிபாடும்
வேலனின் திருவருளால் வேல்தினம் கூத்தாடும்
சேவலும் மயிலோடு செந்தமிழ் இசைபாடும்
செந்தமிழ் நாதத்தால் ஜெகம் மறந்தாடும்.
-திருச்செந்தூரின்

அற்புதத் திருப்புகழை தந்தான் அருணகிரி
அதைகேட்க ஆறுமுகன் வந்தான் தினசரி
மலைகளின் படிகளும் திருப்புகழ் பாடும்
மன்னவன் திருக்காட்சி தனை தினம் நாடும்.
-திருச்செந்தூரின்

# அழகா உன்படைவீடு ஓராறு

அழகாஉன் படைவீடு ஓராறு - உன்
அடியார்கள் பணிகின்றோம் நீபாரு
அழைத்ததும் வரநீல மயிலேறு - நல்
அன்பர்கள் வாழ்வினிலே நலம்சேரு.

- அழகாஉன்

அன்புடன் தமிழ்பாடல் நீதந்தாய் - அதில்
அமுதாக அருணகிரி புகழ்தந்தான்
அனுபூதி அலங்காரம் உடன்தந்தான் - அதை
அனுதினம் படிப்போர்க்கு வளம்தந்தாய்.

- அழகாஉன்

தேனுடன் தினைமாவை தான்தந்தாள் - வள்ளி
தெய்வானை உடன்நின்று உனைபணிந்தாள்
தணிகை மலைமீது நீயமர்ந்தாய் - எமக்கு
தணியாத உன்னருளை நீதந்தாய்.

- அழகாஉன்

# பாலனவன் வேலனுக்கு
# பைந்தமிழ்மாலை

பாலனவன் வேலனுக்கு பைந்தமிழ்மாலை - தினம்
பாடிநாமும் தொழுதிடுவோம் அவன்வடிவேலை
அருணகிரி தந்துநின்றான் திருப்புகழ்மாலை-அதை
அனுதினமும் ஓதுவதே அன்பர்கள்வேலை.

- பாலனவன்

சேவல்மயில் சேர்ந்துவரும் நல்அதிகாலை - அது
சேந்தனவன் புகழைபாடும் இசைமணிமாலை
வேல்நிமிர்ந்து காட்சிதரும் பழமுதிர்சோலை-தினம்
வேண்டிவர தந்திடுமே அருட்புகழ்மாலை.

- பாலனவன்

ஆறுபடை வீட்டினிலே முருகனருள்வான் - மன
ஆறுதலை தந்துதினம் மனதில்வருவான்
அன்பர்வேண்டும் வரங்களையே அவனும்
தருவான் - நல்ல
அழியாத புகழைச்சேர்க்க மயிலில்வருவான்.

- பாலனவன்

# பைந்தமிழால் உன்னை பாடிடுவேன்

பைந்தமிழால் உன்னை பாடிடுவேன்-முருகா
பணிவுடன் நின்பதமே நாடிடுவேன்
படைவீட்டில் உன்னருளை தேடிடுவேன்-தினம்
பணிந்தேத்தும் அடியாருடன் கூடிடுவேன்
-பைந்தமிழால்

துதிப்போர்க்கு வல்வினையும் பறந்தோடும்
-உன்னை
கதியென்று வருவோர்க்கு அருள்கூடும்
அலைமேவும் கடலோரம் மயிலாடும்-எழிற்
கலையாகி உன்னெதிரில் தினம்பாடும்
- பைந்தமிழால்

திருப்புகழ் தினம்பாட நாவினிக்கும்-அதனால்
திகட்டாத பேரின்ப நிலைபிறக்கும்
அனுபூதி அலங்காரம் விருந்தாகும்-அது
அன்பர்கள் வாழ்வினிலே மருந்தாகும்
-பைந்தமிழால்

நினைத்ததும் நெஞ்சினில் நீவருவாய்-பெரும்
நிலையான நிம்மதியை நீதருவாய்
அமுதான தமிழ்பாட்டில் நீயிருப்பாய்-நல்
அன்பர்கள் குறைதன்னை நீபொறுப்பாய்
-பைந்தமிழால்

# சரவண பவஎன்று தினம்சொல்வாய்

சரவண பவஎன்று தினம்சொல்வாய்-மனமே
சண்முகன் தாள்பணிய மலைசெல்வாய்
வடிவேலை நினைத்து வினைவெல்வாய் - என்றும்
வரும்தீய நினைவை நீகொல்வாய்.

- சரவண

சிக்கலில் தாயிடத்தில் வேல்நிமிர்ந்தது - நம்
சிக்கலை நீக்கிடவே மனம்குளிர்ந்தது
அலைபாயும் கடலோரம் வீடிருந்தது - அங்கே
அகங்காரம் தான்மறைய அருளிருந்தது.

- சரவண

அற்புத விருந்தாகும் ஆறெழுத்து - அழகு
ஆலமுண்ட சிவனறிந்தான் ஓரெழுத்து
அருள்தர இதையன்றி ஏதெழுத்து-அதை
அனுதினம் பாடமாறும் தலையெழுத்து.

- சரவண

# வடிவேலய்யா வடிவேலய்யா

வடிவேலய்யா வடி வேலய்யா-என்னை
வாழ்த்தியே வரமருள வா வேலய்யா.
-வடிவேலய்யா

தினந்தோறும் நலம்கூட்டும் திருநீறய்யா - அது
தித்திக்கும் திருவருளை தரும்பாரய்யா.
- வடிவேலய்யா

அலங்காரம் அனுபூதி துணைதானய்யா - அதை
அன்புடன் துதிப்பவர்க்கு பகையேதய்யா
அழகென சிறந்தது படைவீடய்யா - அங்கே
அருள்தர உனக்கென்றும் தடையேதய்யா.
- வடிவேலய்யா

அழகோடு வலம்வருவாய் மயில்மீதய்யா - அந்த
அற்புத திருக்கோலம் விருந்தேஐய்யா
வள்ளிதெய்வ யானையுடன் வருவாய்ஐயா-என்றும்
வடிவேலை வணங்கஅருள் தருவாய்ஐயா.
- வடிவேலய்யா

# மதில்மீது மயிலாடும் மன்னவன் புகழ்பாடும்

மதில்மீது மயிலாடும் மன்னவன் புகழ்பாடும்
மகிழ்வோடு கடலலைகள் செந்தூரில் குதித்தாடும்
-மதில்
வேல்வந்து விளையாடும் வினைகளும் பறந்தோடும்
வேலவன் பெயர்சொல்லி சேவலும் சேர்ந்தாடும்
-ம

சரவணன் சன்னதியில் சந்தங்கள் உறவாடும்
சங்கத்தமிழ் உயர்வாய் சந்ததம் துதிபாடும்
அனுபூதி அலங்காரம் அன்பர்க்கு விருந்தாகும்
ஆலய திருநீறு அரும்பெரும் மருந்தாகும்
-மதில்

சந்தனமும் பன்னிரும் என்றுமே மணக்கும்
எந்தை முருகனவன் மேனியில் சிறக்கும்
ஆறுமுகன் வாசலிலே அருள்ஒளி பிறக்கும்
அடியவர் நெஞ்சினிலே துணையென இருக்கும்
-மதில்

# ஆடி ஆடி வருகுது
# கந்தன் காவடி

ஆடிஆடி வருகுது கந்தன்காவடி-என்றும்
அரோகரா எனச்சொல்லும் அழகுகாவடி
அன்பர்களின் தோள்களிலே அரியகாவடி-நல்ல
ஆடிமாத கிருத்திகையில் ஆடும்காவடி

-ஆடிஆடி

பாலனவன் சிறுவனுக்கு பாலில்காவடி-ஞான
பழமான தெய்வத்துக்கு பழத்தில்காவடி
பூமியெங்கும் புகழைப்பாடும் புஷ்பக்காவடி-திரு
மாலின்மருகன் முருகனுக்கு மச்சக்காவடி

-ஆடிஆடி

கந்தன்புகழில் கனிந்துருகும் சந்தணக்காவடி
எந்தை முருகன் எழிலைக்காணும் எளியக்காவடி
பாடம் சொன்ன முருகனுக்கு பன்னீர்க்காவடி
பார்க்கபார்க்க திகட்டாது பழனிகாவடி

-ஆடிஆடி

# காவடி ஆட்டம் காணகண்கள் கோடி வேண்டுமே

காவடிஆட்டம் காணகண்கள் கோடிவேண்டுமே
-அழகு
கந்தன்அருளை தினமும்நாமும் நாடவேண்டுமே
நலமேதந்திடும் திருப்புகழ்தினமும் பாட
வேண்டுமே - என்றும்
நம்மைதொடரும் தீவினையெல்லாம்
ஓடவேண்டுமே.
- காவடி

பாலில்காவடி எடுக்கநமது பாவம்போகுது - பல
பழத்தால்காவடி செலுத்தநமக்கு பண்புவளருது
ஆயிரம்காவடி கண்டதும்மனதில் அன்புபெருகுது
- நாம்
அன்புடன்கந்தன் அடியையபணிந்தால்
அருளும்சுரக்குது
- காவடி

உலகில்என்றும் உயர்வைநமக்கு உரைக்கும்காவடி
- அது
உயர்வுடன்அழைத்து நமக்குகாட்டும்
முருகன்சேவடி
மண்ணில்அறமே தழைக்கவந்த மருகன்பூவடி
-நம்
கண்ணில்ஒளியாய் காட்சியைதருமே கந்தன்திருவடி
- காவடி

# காவடி எடுத்து ஆடிடுவோம்

காவடி எடுத்து ஆடிடுவோம் - நம்
கந்தனை எண்ணியே பாடிடுவோம்
வந்தனை செய்தே வாழ்த்திடுவோம் - வெற்றி
வடிவேல் முருகனை துதித்திடுவோம்.

- பால்காவடி

பழனியில் முருகனை பார்த்திடுவோம் - சுவை
பழத்தால் காவடி சேர்த்திடுவோம்
செந்தில் வேலவன் சன்னதியில் - உயர்
சேவற் கொடியினை வணங்கிடுவோம்.

- பன்னீர்காவடி

தணிகை மலைப்படி ஏறிடுவோம் - தீந்
தமிழில் திருப்புகழ் கூறிடுவோம்
வேலுடன் காவடி செலுத்திடுவோம் - வடி
வேலவன் திருவடி பணிந்திடுவோம்.

- புஷபக்காவடி

மாலின் மருகனை நினைந்திடுவோம் - அந்த
முருகனை துதித்து உயர்ந்திடுவோம்
வள்ளி மணாளனை புகழ்ந்திடுவோம் - நாம்
வாழ்வில் என்றும் சிறந்திடுவோம்.

- சந்தனக்காவடி

# எங்கெங்கு காணினும் காவடிகள்

எங்கெங்கு காணினும் காவடிகள்-அது
என்றும் புகழ்ந்திடும் சேவடிகள்
கந்தனின் கோயிலில் காவடிகள்-என்றும்
வந்தனை செய்திடும் பூவடிகள்

-எங்கெங்கு

ஆனைமுகன் தம்பி காவடிகள்-மன
ஆறுதல் தந்திடும் காவடிகள்
ஆறுபடை வீட்டில் காவடிகள்-அன்பர்
அன்புடன் தந்திடும் காவடிகள்

-எங்கெங்கு

பால்பழம் விபூதி காவடிகள்-ஞான
பாலகன் முருகன் காவடிகள்
சந்தணம் பன்னீர் காவடிகள்-உயர்
செந்தமிழ் பாடிடும் காவடிகள்

-எங்கெங்கு

தைபூசத் திருநாள் காவடிகள்-பல
புண்ணியம் சேர்ந்திடும் காவடிகள்
ஆடி கிருத்திகை காவடிகள்-எங்கும்
ஆடிஆடி வரும் காவடிகள்

-எங்கெங்கு

# எத்தனை காவடிகள் முருகனுக்கு

எத்தனை காவடிகள் முருகனுக்கு-உயர்
ஏரகப்பதி வாழும் இறைவனுக்கு
திருவடி தினம்சேர மனமிருக்கு-அதனால்
திருப்படி தான்ஏறும் குணமிருக்கு

-எத்தனை

ஆயிரம் ஆயிரமாய் காவடிகள்-வந்து
அன்புடன் வணங்கும் சேவடிகள்
அன்பர்கள் புகழ்கின்ற பூவடிகள்-நமக்கு
அனுதினம் அருள்கின்ற திருவடிகள்

-எத்தனை

உத்திரத் திருநாளில் பெருங்கூட்டம்-அடியார்
பக்தியுடன் காண்பார் தேரோட்டம்
ஆவினன் குடிமேலே அற்புதங்கள்-என்றும்
ஆடிடும் காவடிதேடும் பொற்பதங்கள்

-எத்தனை

# அன்பான சிவன்வாழும் தலம்ஐந்து

அன்பான சிவன்வாழும் தலம்ஐந்து - நம்
ஆன்மாவில் ஒளிவீசும் விதம்ஐந்து

- அன்பான

காஞ்சியில் காமாட்சி அருள்சுரந்தாள் - அன்னை
கனிவாய் அருள்தரவே சிவன்சிறந்தான்

- அன்பான

ஐம்பெரும் திருத்தலத்தில் முதலாகும் - சிவன்
அழகாய் உருவெடுத்த தலமாகும்
மண்ணிலே சிறந்த நிலமாகும் - காஞ்சி
கண்ணிலே கண்டாலே வளமாகும்.

- அன்பான

மண்ணோடு மண்ணாய் தான்கலந்தான் - மனம்
மகிழ்வுடன் தேவியின் உளம்நிறைந்தான்
மாவடி சேவையில் அருள்ஒளிரும் - தெய்வ
திருவடி தினம்காண மனம்குளிரும்.

- அன்பான

கம்பா நதியோரம் தவமிருந்தாள் - தேவி
கயிலை நாதனை தினம்நினைந்தாள்
தேவியின் தவத்தினிலே மனம்நிறைந்தான் - சிவன்
தேனாக இனித்திருந்தே அருள்புரிந்தான்.

- அன்பான

# ஆனைக்காவில் சிவபெருமான் அழகானவன்

ஆனைக்காவில் சிவபெருமான் அழகானவன்
- பெரும்
ஆற்றுவெள்ளம் போலதனில் உருவானவன்
நீர்நிறைந்த தலமெனவே பேர்படைத்தது - எழில்
நிலவும்வானும் போற்றிடவே புகழ்படைத்தது
- ஆனைக்காவில்

காவிரி கரையருகே ஆனைக்காவல் - எந்த
காலமும் நாம்வாழ சிவன்காவல்
எப்போதும் புகழ்பாட மனம்ஆவல் - அதை
தப்பாமல் நாம்பாட சிவன்காவல்.
- ஆனைக்காவில்

அகிலாண்ட ஈஸ்வரிக்கு சிவன்துணைவன் - இந்த
அகிலமே போற்றிநிற்கும் பெரும்அழகன்
ஊற்றுவெள்ளம் நடுவினிலே உயர்வானவன்-துயர்
மாற்றிநின்று அருள்கொடுக்கும் திருவானவன்
- ஆனைக்காவில்

# அற்புத எழில்பொங்கும் அண்ணாமலை

அற்புத எழில்பொங்கும் அண்ணாமலை-நாம்
அன்புடன் தினம்பணிந்தால் அருள்தரும்
திருமலை-அண்ணாமலை
-அற்புத

ஆலமுண்ட சிவன்ஜோதி வடிவானவன்-இங்கே
அன்னையை உடன்கொண்டு அருளானவன்
-அற்புத

அண்ணாமலை என்னும் பெயரோடு-அழகு
அபித குசாம்பாள் துணையோடு
ஐம்பெரும் தலங்களில் உயர்வோடு-நின்று
ஆறுதலை அளிப்பான் பரிவோடு
-அற்புத

மாலுடன் அயனும் தினம்தேட-சிவன்
மண்ணிலும் விண்ணிலும் நிறைந்தோட
அடிமுடி காணாமல் பறந்தோட-உடன்
ஆனந்த ஜோதிகண்டு கூத்தாட
-அற்புத

அரோஹரா எனும்கீதம் தினம்கேட்கும்-அதை
அன்புடன் சொல்பவர்க்கு புகழ்சேர்க்கும்
கார்த்திகை திருநாளில் திருக்காட்சி-அதை
காண்பவர் வாழ்வெல்லாம் நிறைவாச்சி
-அற்புத

# காளத்தி நாதன் கருணையானவன்

காளத்தி நாதன் கருணையானவன்-அன்பு
கனிந்திடும் மனங்களில் குழந்தையானவன்.
-காளத்தி

ஞானப் பூங்கோதை உடனிருப்பாள்-நல்ல
ஞானம்பெறும் வழிகளை தானுரைப்பாள்.
-காளத்தி

வேடுவன் கண்ணப்பன் கண்கொடுத்தான்-தன்
வேதனை நீங்கிடவே பிறப்பெடுத்தான்
அன்புடன் இறைச்சியை தான்கடித்தான்-பின்
அதையே அமுதமாய் தான்படைத்தான்.
-காளத்தி

மணியான ஜோதியில் காற்றுருவாய்-தான்
மகிழ்வாய் கலந்திருப்பான் திருவுருவாய்
நீர்நிலம் நெருப்பு காற்றுடனே-என
நித்தியம் வாழ்ந்திருப்பான் புகழுடனே.
-காளத்தி

# ஆகாய திருத்தலமே தில்லையம்பலம்

ஆகாய திருத்தலமே தில்லையம்பலம்-சிவன்
ஆடியே கனிந்துநின்ற பொன்னம்பலம்.

-ஆகாய

அன்னைசிவ காமியுடன் தான்வருவான்-என்றும்
அற்புத நடம்புரிந்து அருள்தருவான்.

-ஆகாய

தில்லைவாழ் அந்தணரின் திருப்பூசை-அது
தித்திக்கும் தெவிட்டாத அருட்பூசை
நாவார பாடிநின்ற நந்தனுமே-நந்தி
நகர்ந்தே காட்சிபெற்றான் அற்புதமே.

-ஆகாய

சிதம்பர ரகசியம் கண்குளிரும்-நல்ல
சிங்கார எழிலுருவாய் அதுமிளிரும்
ஆறுகால அபிஷேகம் தினம்நடக்கும்-அதை
அன்புடன் கண்டாலே மனமினிக்கும்.

-ஆகாய

தில்லையிலே பார்த்திடணும் காளிதரிசனம்-பெரும்
எல்லையிலா இன்பங்களை பெற்றிடணும்
சிவனவன் ஐந்தெழுத்தை பாடிடணும்-தினம்
சிற்சபை தனில்நின்று போற்றிடணும்.

-ஆகாய

# திருக்கழுக்குன்றத்து திருக்கோயில்

திருக்கழுக் குன்றத்து திருக்கோயில்-அன்னை
திரிபுர சுந்தரியின் அருட்கோயில்
சிவனுக்கு மலைமேல் ஒரு கோயில்-என்றும்
சீருடன் சிறப்பை தரும்கோயில்
-திருக்கழுக்குன்றத்து

இறைவனின் பெயரோ மலைமருந்து-நல்
இன்பமே அளிப்பான் துணையிருந்து
தேவாதி தேவர்கள் தவமிருந்து-சிவனை
தேடியே அடைந்தார் பெரும்விருந்து
-திருக்கழுக்குன்றத்து

ஈராறு ஆண்டில் சங்கு முளைக்கும்-நம்
ஈசனின் திருவருளில் அதுதிளைக்கும்
லட்சமாய் தீபங்கள் ஒளிவீசும்-அது
லட்சிய வாழ்வுக்கு துணைபேசும்.
-திருக்கழுக்குன்றத்து

# ஈஸ்வரன் ஆட்சீஸ்வரன்

ஈஸ்வரன் ஆட்சீஸ்வரன்-அன்னை
இளங்கிளி உடனுறையும் ஈஸ்வரன்
-ஈஸ்வரன்

பணிவுடன் அடியார்கள் பாடியதிருத்தலம்-நாம்
பார்த்ததும் பரவசம் அடைந்திடும் அருட்தலம்
-ஈஸ்வரன்

ஆனைமுகன் தன்னை சிவன்மறந்தான்-அதனால்
அழகிய தேரோட்டம் தனையிழந்தான்
அன்புடன் மகனை சிவன்நினைந்தான்-உடன்
அசைந்திடும் தேரினில் சிவன்நிறைந்தான்
-ஈஸ்வரன்

ஐந்து நிலைகொண்ட பெருங்கோயில்-அழகு
அச்சிறு பாக்கத்து எழிற்கோயில்
சித்திரை திருவிழா மனம்நிறையும்-நல்
சித்தமுடன் பணிந்தாலே அருள்உறையும்
-ஈஸ்வரன்

# கலைகளின் தாயே கலையரசி

கலைகளின் தாயே கலையரசி-உயர்
கல்வியை தருவாய் எழிலரசி

-கலைகளின்

தாமரை அமரும் பூவரசி-இந்த
தாரணி போற்றிடும் தமிழரசி

-கலைகளின்

இசையினை தருவாய் இசையரசி-நல்
இன்பத்தின் வடிவே அன்பரசி
நாவினில் நடமிடும் நல்லரசி-தமிழ்
பாவிலும் வருவாய் பண்பரசி

-கலைகளின்

வீணையை கொண்டாய் விண்ணரசி-வரும்
வினைகளை களைவாய் அருளரசி
கல்வியை செல்வமாய் தருமரசி-உயர்
சொல்லிலே உயர்வாய் சொல்லரசி

-கலைகளின்

# கலைகளின் தாயே கலைவாணி

கலைகளின் தாயே கலைவாணி-உயர்
கல்வியை செல்வமாய் தருவாய் நீ
பணிந்திட பதமலர் தருவாய் நீ-மனக்
கனிவுடன் காட்சியை தருவாய் நீ

-கலைகளின்

வீணையின் நாதம் சிறந்ததம்மா-எழில்
வித்தகி உன்னிடம் பிறந்ததம்மா
அவனியில் ஆயிரம் கலையம்மா-அவை
அன்பெனும் வாழ்வின் நிலையம்மா

-கலைகளின்

அறிஞர்கள் நாவில் உன் நடனம்-அது
அழகாய் புரியும் களிநடனம்
வெள்ளைத் தாமரை உன்வீடு-கலை
வேண்டுவோர் மனமே நீ நாடு

-கலைகளின்

இயல்இசை உனது அலங்காரம்-பெரும்
இன்பமும் தந்திடும் பலகாலம்
புலமை பெருகிட மனம்நிறைந்தாய்-உயர்
புகழுடன் பொருளாய் நீ உறைந்தாய்

-கலைகளின்

# கருணை தெய்வமே காமாட்சி

கருணை தெய்வமே காமாட்சி-எந்த
காலமும் உந்தன் அருளாட்சி
மண்ணில என்றும் உன்னாட்சி-எழில்
மதுரையில் உன்பெயர் மீனாட்சி

-கருணை

காஞ்சி நகரினில் உன்கோயில்-என்றும்
கனிவாய் விளங்கும் பெருங்கோயில்
காமகோடி பீடத்து எழிற்கோயில்-அருள்
கற்பகமாய் திகழும் திருக்கோயில்

-கருணை

ஸ்ரீசக்ரம் நடுவினில் நீ இருப்பாய்-நல்
சீருடன் சிறப்பெல்லாம் நீ தருவாய்
கரும்பினை கைகொண்டு நீ சிரிப்பாய்-உயர்
காஞ்சிமா முனிவர்க்கு துணையிருப்பாய்

-கருணை

என்றுமே சன்னதி ஒளிவீசும்-உன்
எழிற்பதம் அடியார்க்கு அருள்வீசும்
அன்புடன் தொழுவார்க்கு நலம்கூட்டும்-இந்த
அகிலமே சிறந்திட வழிகாட்டும்

-கருணை

# அருளாட்சி செய்பவளே

அருளாட்சி செய்பவளே ஆனந்தவல்லி-அழகு
அங்கையர் கண்ணியே அருள்நிறைவல்லி
-அருளாட்சி

துர்கா சக்கரத்தில் வீற்றிருப்பாய்-வரும்
துயர்களை எல்லாம் நீ களைவாய்
எழிலுடன் எலுமிச்சை கனியிருப்பாய்-பல
ஏற்றங்கள் தந்தே கொலுவிருப்பாய்
-அருளாட்சி

தூய உள்ளத்தினில் குடியிருப்பு-பெரும்
துன்பங்கள் துடைப்பதும் உன் பொறுப்பு
அன்பர்கள் மனதினில் உன் சிறப்பு-அதை
அனுதினம் எண்ண இல்லை மறுபிறப்பு
-அருளாட்சி

# தேவியின் தரிசனம்

தேவியின் தரிசனம் கண்டால் சுகமே
தேடிவரும் தினமே-நம்
தேவைகள் எல்லாம் அறிந்தே அன்பாய்
தருவாள் பெரும்நலமே

-தேவியின்

அன்னையின் திருமுகம் அழகிய நிலவென
அனுதினம் ஒளிவீசும்-நல்
அன்பர்கள் உள்ளம் நாளும் நிறைந்தே
அழகாய் புகழ்பேசும்

-தேவியின்

திருமலை போலே திருவருள் தனையே
தந்தான் வேங்கடவன்-ஸ்ரீ
தேவி சரணம் கீதம் கேட்டிட
வந்தான் வேங்கடவன்

-தேவியின்

புரட்டாசி மாதம் தசமி நன்னாளில்
அன்னையின் கல்யாணம்-இந்த
அற்புத கோலம் கண்டிட நமக்கு
ஆயிரம் கண்வேணும்

-தேவியின்

# ஸ்ரீதேவி ஸ்ரீனிவாசன்

ஸ்ரீதேவி ஸ்ரீனிவாசன் கல்யாணம்-அந்த
திருக்கோலம் காண நாமும் வரவேணும்

-ஸ்ரீதேவி

ஸ்ரீதேவி சரணத்தில் எழில்கொஞ்சும்-நல்
சீரோடு சிறப்பெல்லாம் தினம்மிஞ்சும்

-ஸ்ரீதேவி

அன்போடு நடந்திடுமே ஆராதனை-தாஸன்
அருள்வாக்கில் மறைந்திடுமே மனவேதனை
தேவியின் அலங்காரம் மனம்நிறையும்-தினம்
தேடிவந்து பணிந்தாலே சுகம்நிறையும்

-ஸ்ரீதேவி

நவராத்ரி திருநாளில் மணம் நடக்கும்-நாம்
நலம் வேண்டி துதித்தாலே அருள்கிடைக்கும்
ஆலய மணியோசை தினமழைக்கும்-நாம்
அன்புடன் சென்றாலே துயர்துடைக்கும்

-ஸ்ரீதேவி

# தாயே தயாபரி பரமேஸ்வரி

தாயே தயாபரி பரமேஸ்வரி-உள்ளம்
தணியாத அருள் சுரக்கும் புவனேஸ்வரி

-தாயே

ஜெகமெல்லாம் புகழ்பாடும் ஜெகதீஸ்வரி-உயர்
ஜெகன்மாதா எனப்போற்றும் சர்வேஸ்வரி

-தாயே

மங்களத் திருவுருவே மாதேஸ்வரி-மக்கள்
மனமெல்லாம் நிறைந்திடுவாய் ராஜேஸ்வரி
ஞானத்திலே திளைக்கும் ஞானஸ்வரி-அருள்
மோனத்திலே இருப்பாய் யோகேஸ்வரி

-தாயே

கற்பகமாய் அருளும் காமேஸ்வரி-என்றும்
கருணையாய் காத்திடுவாய் காளீஸ்வரி
பதமலர் தனைத்தருவாய் பாகேஸ்வரி-தினம்
பரிவுடன் எமையாளும் பத்மேஸ்வரி

-தாயே

# ஐயாறு திருத்தலத்தில்

ஐயாறு திருத்தலத்தில் அருள்புரிவாள்-அன்னை
அன்புடன் பணிந்தாலே மனம் வருவாள்

-திருவையாறு

பஞ்சநதீஸ்வரன் துணையிருப்பாள்-உயர்
பஞ்சமும் பறந்தோட துணைபுரிவாள்
ஒருமுறை பிறந்தாலே முக்திதரும்-அன்னை
திருவடி தினம்பணிய சக்திபெரும்

-திருவையாறு

தர்மசம் வர்த்தினியின் அலங்காரம்-இந்த
தரணியில் அதுவேதான் சிங்காரம்
ஈசனுக்கு அன்னையோ ஒருதாரம்-அவள்
இணையடி பணிந்தால் இல்லைசேதாரம்

-திருவையாறு

# பார்த்திட இனிக்கும்

பார்த்திட இனிக்கும் பாலாவின் பீடம்
பணிந்திட வாருங்கள்-அன்னை
பாலாவின் நாமம் பாகென இனிக்கும்
பாடியே பாருங்கள்

-பார்த்திட

நெமிலியில் அன்னை பாலாவின் வீட்டில்
நேயம் நிறைந்திருக்கும்-உடல்
நலிவுகள் நீங்கும் நன்மைகள் பெருகும்
நலமும் சிறந்திருக்கும்

-பார்த்திட

வேதமும் நாதமும் அன்னையை பணிந்தே
வேதனை தீர்க்கிறது-மன
வேண்டுதல் பலித்திட வாழ்வும் சிறந்திட
வழியும் சொல்கிறது

-பார்த்திட

மஞ்சளும் குங்குமம் அன்னையின் அருளால்
மகிழ்வுடன் கிடைக்கிறது-அன்னை
துதியினை பாடி போற்றிப் பணிந்திட
துன்பம் பறக்கிறது

-பார்த்திட

# திரிபுர சுந்தரியின் திருப்பீடம்

திரிபுர சுந்தரியின் திருப்பீடம்-அன்னை
திருப்புகழ் தினம்பாடும் எழிற்பீடம்
-திரிபுரசுந்தரியின்

பாலாம்பிகை என்பது அவள்பெயரே-அவளை
பாடிட பறந்திடும் மனத்துயரே
-திரிபுர சுந்தரியின்

இசைக்கலை வடிவான திருக்கோயில்-ஏழ்
இசைதனை வளர்த்திடும் பெருங்கோயில்
அருளோடு பொருள்தரும் அருங்கோயில்-மன
அமைதியை அளித்திடும் அருட்கோயில்
-திரிபுர சுந்தரியின்

அன்னையின் அலங்காரம் விருந்தாகும்-நல்
அருளே நமக்கு மருந்தாகும்
அன்பினை பெறுவது எளிதாகும்-என்றும்
ஆலயம் வலம்வர தெளிவாகும்
-திரிபுர சுந்தரியின்

# நெமிலிக்கு வந்து அன்னையை கண்டால்

நெமிலிக்கு வந்து அன்னையை கண்டால்
நெஞ்சம் இனித்திடுதே
நேரமும் காலமும் எல்லாம் அவளே
என்றே உரைத்திடுதே

-நெமிலிக்கு

பாலா திரிபுரசுந்தரி கோயில்
பளிங்கென ஒளிர்கிறதே
பணிவுடன் அன்னையை பணிந்தால் உள்ளம்
பால்போல் வெளுக்கிறதே

-நெமிலிக்கு

அருள்நவ ராத்திரி கோலம் கண்டால்
அருளும் சுரக்கிறதே
அன்னை பாலா அற்புதக் கோலம்
அழகினில் சிறக்கிறதே

-நெமிலிக்கு

# முத்துமணி மண்டபத்தில் முத்துமாரி

முத்துமணி மண்டபத்தில் முத்துமாரி-நல்ல
மூன்றுதமிழ் கொஞ்சிவரும் அன்னைமாரி
சமய புரத்தினிலே சக்திமாரி-உயர்
சங்கடங்கள் நீக்கிவரும் தேவிமாரி

-முத்துமணி

தண்ணருளை தந்திடுவாள் தண்டுமாரி-அழகு
சிங்காரக் கோலம்கொண்ட சின்னமாரி
கற்பக தெய்வமான கருமாரி-இந்த
கலியுகம் காக்கவந்த காளிமாரி

-முத்துமணி

மாரியென மழைதரும் மகமாரி-உப
காரியென அருள்தரும் அருள்மாரி
சிங்கமுக வாகனத்தில் தங்கமாரி-எழில்
அங்கமெல்லாம் தங்கமான அன்புமாரி

-முத்துமணி

ஆயிரம் கண்ணுடைய கண்ணுமாரி-தமிழ்
பாயிரங்கள் கேட்டுவரும் பண்புமாரி
கோடிஉள்ளம் நாடிவரும் கொடைமாரி-தினம்
பாடிவர பண்பைதரும் கோலமாரி

-முத்துமணி

# சத்தியம் காப்பவள் சமயபுரத்தாள்

சத்தியம் காப்பவள் சமயபுரத்தாள்-நம்
சங்கடம் நீக்கிடுவாள் அபயகரத்தாள்
-சத்தியம்

காவிரி கரையோரம் வீடுகொண்டாள்-எந்த
காலமும் புகழ்ந்தேத்த ஏடு தந்தாள்
- சத்தியம்

அன்னைக்கு மாரியென பெயருண்டு-அவளை
அன்புடன் தொழுவோர்க்கு அருளுண்டு
தாயவள் தயவாலே பொருளுண்டு-தினம்
போற்றி மகிழ்ந்திடவே புகழுண்டு.
- சத்தியம்

மாவிளக்கு படையலில் மனங்குளிரும்-நல்ல
மரகத மணிமாலை மேனியிளிரும்
நாகத்தின் திருவுருவாய் நலமருள்வாள் - இந்த
நாநிலம் சிறந்திட வரமருள்வாள்.
- சத்தியம்

# பூவுடனே பொட்டும் வெச்சி

பூவுடனே பொட்டும் வெச்சி
பொங்கலதை தானும் வெச்சி
பூலோக மாரியுன்னை தேடிவருவோம்-அம்மா
புகழோடும் பொருளோடும் வைப்பாயம்மா.
- பூவுடனே

வாசலிலே வேப்பிலை கட்டி
வாயிற்படி தோரணம் கட்டி
காப்புகட்டி உனைத்தொழுவோம் மாரியம்மா-அம்மா
களிப்புடனே தரிசனத்தை தாருமம்மா
- பூவுடனே

மஞ்சளுடன் குங்குமமும்
மகிழ்வுடனே தந்திடுவோம்
மண்ணாளும் சமயபுர மாரியம்மா-அம்மா
மழலை எங்கள் மனதினிலே வாருமம்மா
- பூவுடனே

பூவாடை நீயும் கட்டி
புகழ் வலமே வந்திடுவாய்
புற்றினிலே வளர்ந்துவரும் மாரியம்மா-அம்மா
புவனமெலாம் செழிக்க அருளை தாருமம்மா.
- பூவுடனே

# முக்தி தரும் முழுநிலவே மூகாம்பிகே

முக்தி தரும் முழுநிலவே மூகாம்பிகே-சிவ
சக்தியாய் தான்மலர்ந்த கமலாம்பிகே

- முக்தி

குடசாத்ரி மலையருகே உன்வாசமே-எழில்
கலையோடு திருவிழிகள் அருள் வீசுமே

- முக்தி

சௌபர்ணிகை நதியில் நீராடவே-வரும்
சௌபாக்யம் எல்லாமும் உன்னாடலே
கொல்லூர் திருத்தலத்தில் உன்னாலயம்-அது
பொல்லா கலிதீர்க்கும் கருணாலயம்

- முக்தி

அன்புடன் அடியார்கள் திருக்கூட்டமே-வந்து
அனுதினம் உன்புகழை தினம்கூட்டுமே
அன்னையுன் திருப்பாதம் வினைஓட்டுமே-என்றும்
அன்புடன் தான்பணிய வழிகாட்டுமே.

- முக்தி

# ஓம் எனச் சொன்னாலே

ஓம்எனச் சொன்னாலே உடலெல்லாம் சிலிர்க்குது
ஓங்காரி புகழ்பாட நாவெல்லாம் இனிக்குது
- ஓம்

மருவூரின் திருத்தலத்தில் மண்ணெல்லாம்
மணக்குது
மனமுருகி தொழுதாலே வாழ்வெல்லாம் சிறக்குது
- ஓம்

அருள்நவ ராத்திரியில் அன்னையும் சிரிக்கிறாள்
அன்பான மனங்கண்டு நிறைவோடு இருக்கிறாள்
அவளது புகழ்பாட ஆடியே வருகிறாள்
அருளோடு பொருள்சேர்த்து அழகாக தருகிறாள்
- ஓம்

அனுதினம் அவள்வீட்டில் உடல்வலம் நடக்குது
அடியாரின் உடலினிலே ஆரோக்யம் திளைக்குது
அன்னையின் காட்சியில் அற்புதம் ஜொலிக்குது
ஆலயப்படி சென்றால் அருள்நாமம் இனிக்குது.
- ஓம்

# அருணகிரி பெயரைச் சொன்னால்

அருணகிரி பெயரைச்சொன்னால் நாவினிக்கும்
-அவர்
அருந்தமிழ் புகழைக்கேட்டால் உளமினிக்கும்
-அருணகிரி

அற்புத தமிழிசைத்த தமிழ்முனிவர்-இந்த
அண்ணாமலை போற்றுகின்ற தவமுனிவர்
-அருணகிரி

ஆறுமுகன் வேல்வந்து நாபதிந்தது-அது
அருணகிரி மனமெங்கும் பரவிநின்றது
அனுபூதி அலங்காரம் தமிழில்சிறந்தது-அதை
அன்புடன் பாடிடவே வாழ்வும் உயர்ந்தது.
- அருணகிரி

# காஞ்சி காமாட்சி

காஞ்சி காமாட்சி அன்னையின் அருளால்
காஞ்சிப் பெரியவர் பிறந்தார்-தன்
கருணை விழிகளால் நம்மை ஆண்டே
கனிவுடன் பூமியில் சிறந்தார்

- காஞ்சி

சங்கர மடத்தினில் அறுபத்தி] எட்டாம்
குருவெனவே வந்து திகழ்ந்தார்-மன
சங்கடம் நீக்கியும் சஞ்சலம் போக்கியும்
சாந்தி அளித்தே நிறைந்தார்

- காஞ்சி

அன்பும் அறமும் வாழ்வின் கண்கள்
என்றே அனுதினம் உரைத்தார்-தன்
அழகிய பாதங்கள் பதித்தே பாரத
வலம்வந்து பாவங்கள் கரைத்தார்

- காஞ்சி

ஆண்டுகள் நூறு அன்புடன் வாழ்ந்து
அற்புதம் ஆயிரம் புரிந்தார்-இந்த
அகிலம் சிறந்திட அருளும் பெருகிட
அன்பே சிவமாய் திகழ்ந்தார்.

- காஞ்சி

# காஞ்சியில் பேசும் தெய்வமுண்டு

காஞ்சியில் பேசும் தெய்வமுண்டு-பெருங்
கருணை வழங்கும் மனமுண்டு

- காஞ்சியில்

நடமாடும் தெய்வம் எனச்சொல்வார்-இந்த
நானிலம் சிறந்திட வழிசொல்வார்

- காஞ்சியில்

அன்பே சிவமென அவரானார்-இந்த
அகிலம் போற்றும் குருவானார்
காவியும் நீறும் தான்கொண்டார்-தன்
கருணை விழியால் நமையாண்டார்

- காஞ்சி

ஆயிரம் ஆயிரம் உபதேசம்-உயர்
அற்புதம் அனைத்தும் அதில்பேசும்
தண்டுடன் காட்சி அவர்தருவார்-தினம்
பண்புடன் வேண்டிட அருள்புரிவார்.

- காஞ்சியில்

# சத்குரு தாளினை பணிமனமே

சத்குரு தாளினை பணிமனமே-உயர்
சஞ்சலம் போக்கி வாழ்தினமே.

- சத்குரு

அன்புடன் அறம்சேர்ந்த அருள்வாக்கு-தினம்
அடியார்க்கு தருவதே அவர்நோக்கு

- சத்குரு

மனதில் இருப்பதை தான்அறிவார்-முழு
மனதுடன் அருள்தந்து தயைபுரிவார்
ஒருமுறை கண்டாலே வாழ்வினிக்கும்-அவர்
உயர்வான நாமம்சொல்ல நாவினிக்கும்

- சத்குரு

கலைகளும் காவியமும் அவர்விருப்பம்-அதை
களிப்புடன் செய்தாலே தினம்பிடிக்கும்
காலடி சங்கரரே இவர்குருவாம்-காஞ்சி
பெரியவர் இவரே நம்குருவாம்

- சத்குரு

# ஜெயஜெய சங்கர ஹரஹர சங்கர

ஜெயஜெய சங்கர ஹரஹர சங்கர
நாமம் நாளும் பாடுங்கள்-நம்
ஜெகத்குரு தரிசனம் செய்திட அன்பாய்
சங்கர மடத்தினில் கூடுங்கள்
- ஜெயஜெய

அன்பே சிவமென அழகாய் அமர்ந்து
தரிசனம் தருவார் பாருங்கள்-இந்த
அகிலத்தில் அருளை அனைவர்க்கும் தருவார்
அள்ளிப் பருகிட வாருங்கள்
- ஜெயஜெய

பார்த்ததும் பரவசம் நெஞ்சம் இனித்திடும்
பதமே பணிந்திட வாருங்கள்-இந்த
பாரினில் இவரே நடந்திடும் தெய்வம்
பார்த்தால் புரியும் பாருங்கள்.
- ஜெயஜெய

# சங்கர மடத்தினில்

சங்கர மடத்தினில் சாந்தம் தவழும்
சத்குரு நம்மை அழைக்கின்றார்-மன
சஞ்சலம் நீக்கி சாந்தியை தந்து
சத்திய உருவாய் திகழ்கின்றார்
- காஞ்சி சங்கர

பெரியவாள் என்னும் பெயரினை ஏற்று
பேரருள் தினமும் புரிகின்றார்-அழகு
புன்னகை வீசி வணங்கிடும் அடியார்
வாழ்வில் இன்பம் தருகின்றார்
- காஞ்சி சங்கர

கால் நடையாலே பாரதம் முழுவதும்
வலமே வந்து அருள்தந்தார்-இந்த
வையகம் வாழ்ந்திட தவமே புரிந்து
நாளும் நமக்கு நலம்தந்தார்.
- காஞ்சி சங்கர

# சத்குரு நாதா

சத்குருநாதா எங்கள் சத்குருநாதா-உயர்
சத்தியத் திருவுருவே சத்குருநாதா

- சத்குரு

ஜெயம்நிறைந்த ஜெயஆண்டு உனதுபிறப்பு-இந்த
ஜெகம்செழிக்க வந்ததுதான் உனதுசிறப்பு

- சத்குரு

அனுஷமெனும் நல்லநாளும் வந்துநின்றது-அது
அன்புடனே உன்வரவால் உயர்ந்துநின்றது
அகிலம்செய்த புண்ணியமே உந்தன்வரவு-நீ
அன்புடனே நாங்கள்வாழ கொண்டாய்துறவு

- சத்குரு

நாங்கள்வாழ உனதுவாழ்வை தியாகம்
செய்கிறாய்-உயர்
நல்லதவம் நாளும்செய்து நாட்டை காக்கிறாய்
உனதுவாக்கை கேட்கும்உள்ளம் உயர்ந்துநிற்குது
- என்றும்
உனதுகாட்சி கண்டவர்வாழ்வும் சிறந்துநிற்குது.

- சத்குரு

# சங்கர மடமே

சங்கர மடமே சாந்தியை தருமே
சந்ததம் வாருங்கள்-அங்கு
சத்திய உருவில் சத்குரு ஆசியை
தருவார் பாருங்கள்

- சங்கர

சிவந்த மேனியும் சிரித்திடும் அழகும்
நெஞ்சம் மறக்காது-நல்ல
சிந்தனை யோடு நாளும் பணிந்தால்
பிறவியும் இருக்காது

- சங்கர

தன்னிரு கண்கள் போலே சீடர்கள்
இருவரை தந்தாரே-இந்த
தரணி செழித்திட தன்னருள் தந்து
தயவுடன் வந்தாரே

- சங்கர

மனதில் இருப்பதை மறுகணம் அறிவார்
மகிழ்வுடன் வணங்குங்கள்-நல்ல
மாதவம் செய்திடும் அற்புத கோலம்
கண்டே களியுங்கள்.

- சங்கர

# நாரணன் நாமம்

நாரணன் நாமம் சொல்லியே வாழ்த்தும்
நடமாடும் தெய்வம்-இந்த
நானிலம் தனிலே இல்லை இவர்போல்
வேறொரு தெய்வம்

- நாரணன்

முதுமையில் புதுமை இவரது அருமை
கண்டதும் மனமினிக்கும்-இவர்
திருமுக தரிசனம் ஒருமுறை பார்த்தால்
வாழ்வே தினமினிக்கும்

- நாரணன்

காஞ்சி மடத்தினில் இவரைப் போலே
இரண்டு குருமார்கள்-என்றும்
இவரது வழியினில் நன்மைகள் செய்தே
வாழ்த்திட வருவார்கள்

- நாரணன்

ஆயிரம் சூரிய ஒளியினை வீசும்
குருவின் திருமுகமே-நாம்
அனுதினம் அன்புடன் பணிந்தால் வருமே
அரியபெரும் நலமே.

- நாரணன்

# காஞ்சிமா நகரினில் காமகோடி முனிவரை

காஞ்சிமா நகரினில் காமகோடி முனிவரை
கண்ணார காண வேண்டும் - நல்ல
கற்பகம் போன்றதொரு கருணைமா தெய்வத்தின்
பொற்பதம் பேண வேண்டும்

- காஞ்சிமா

சங்கடம் நீக்கிடும் சங்கரர் பாதத்தை
சந்ததம் பணிதல் வேண்டும் - உயர்
சத்தியம் பேசிடும் சந்தோஷ வாழ்வினை
நித்தியம் பெறுதல் வேண்டும்.

- காஞ்சிமா

தருமமெனும் ஊற்றுகள் தானாக சுரந்திடும்
தயவுள்ள நெஞ்சம் வேண்டும் - தினம்
வேண்டிடும் அன்பர்க்கு வேண்டிய பொருள்களை
வேண்டாமல் தரவும் வேண்டும்

- காஞ்சிமா

நானிலம் போற்றிடும் நடமாடும் தெய்வத்தின்
தயவினை நாடிட வேண்டும் - இந்த
மானிடப் பிறப்பினில் மகிழ்வையே தந்திடும்
மன்னனைப் பாட வேண்டும்.

- காஞ்சிமா

# குருமணி தெய்வம் குருமணி தெய்வம்

குருமணி தெய்வம் குருமணி தெய்வம்
குவலயம் காக்கவந்த குருமணி தெய்வம்
- குருமணி

நானிலம் போற்றிவரும் நடமாடும் தெய்வம்
நல்லருள் தனைதந்து நாடியேவரும் தெய்வம்
- குருமணி

ஆயிரம் பிறைகண்ட அற்புத தெய்வம்-நல்
அன்புடன் தொழுவோர்க்கு அதிசய தெய்வம்
மறைகளை மகிழ்ந்தேத்தும் மாபெரும் தெய்வம்-மன
குறைகளை நீக்கிவரும் மாண்புடைய தெய்வம்
- குருமணி

விழிகளில் கருணையை காட்டிடும் தெய்வம்-நல்
வழியினை காட்டியே வாழ்த்திடும் தெய்வம்
மோனநிலை தாங்கும் மோகன தெய்வம்-உயர்
ஞானம் நமக்கருளும் நற்கருணை தெய்வம்
- குருமணி

# காலடி தன்னில் காலடி பதித்த

காலடி தன்னில் காலடி பதித்த
சங்கர குருவே போற்றி
மங்களம் தந்திடும் சங்கரன் நாமம்
தாங்கிய தேவா போற்றி

- காலடி

அன்பே சிவமென அனுதினம் ஓதிடும்
என்குரு தெய்வமே போற்றி
ஞாலம் செழித்திட ஞானம் வளர்க்கும்
ஞானத் தருவே போற்றி

- காலடி

கச்சியம் பதியில் பீடம் கொண்ட
கற்பகத் தாயே போற்றி
கனிவுடன் காணும் அன்பர் மனதினில்
கருவாய் ஆனாய் போற்றி

- காலடி

கருத்துடன் நாளும் கருணையைத் தந்து
காக்கும் தெய்வமே போற்றி
நாரணன் நாமம் நலமே தருமே
நாளும் சொன்னாய் போற்றி.

- காலடி

# ஜெகத்குரு காஞ்சி சத்குரு

ஜெகத்குரு காஞ்சி சத்குரு-இந்த
ஜெகத்தினில் அவரே நம்குரு

- ஜெகத்குரு

நாளும் வருவார் வழித்துணை-உயர்
நலம்தர அவரே பெரும்துணை

- ஜெகத்குரு

வணங்கிடு தினமும் வாழ்த்திடு-அவர்
வாய்மொழி அன்பாய் கேட்டிடு
வருத்தங்கள் எல்லாம் மறந்திடு-குரு
வாழ்த்திட வாழ்வில் உயர்ந்திடு

- ஜெகத்குரு

பெரியவாள் நமக்கு பேரருள்-அவர்
திருவருள் ஒன்றே பெரும்அருள்
கண்டதும் கவலை பறந்திடும்-அவர்
கருணையில் காலம் சிறந்திடும்

- ஜெகத்குரு

நினைந்திட வாழ்வில் குறையில்லை-நாம்
நித்தமும் பணிந்திட துயரில்லை
அருள்முகம் ஒருமுறை பார்த்திடு-அவர்
அடிமலர் பணிந்தே சிறந்திடு.

- ஜெகத்குரு

# தாமரை மலர்மேனி தவழ்ந்திடும் புன்னகை

தாமரை மலர்மேனி தவழ்ந்திடும் புன்னகை
தாங்கியே வந்தாய் குருராக வேந்திரா
- தாமரை

ராமனின் நாமம் தாரக மந்திரம்
சொல்லிட வைத்தாய் குருராக வேந்திரா
- தாமரை

துள்ளியே குதித்தாடும் தூய்மையின் புகழ்பாடும்
துங்கா நதியோரம் குருராக வேந்திரா
துன்பங்கள் நீக்கியே இன்பங்கள் சேர்த்திடுவாய்
தூயவனே குருநாதா குருராக வேந்திரா
- தாமரை

பிருந்தாவனம் தன்னில் அற்புதத் திருக்கோயில்
அமைத்தே அழைத்தவா குருராக வேந்திரா
கற்பகத் திருவுருவாய் காலகாலம் என்நெஞ்சில்
கனிவுடன் அருள்தருவாய் குருராக வேந்திரா
- தாமரை

# மந்த்ராலயம் தனிலே மலர்ந்திருப்பான்

மந்த்ராலயம் தனிலே மலர்ந்திருப்பான்-நம்
மன இருள் அகன்றிடவே துணையிருப்பான்
குருவின் வடிவமாய் அமர்ந்திருப்பான்-இந்த
குவலயம் கொண்டாட மகிழ்ந்திருப்பான்

- மந்த்ராலயம்

மந்தஹாச புன்னகையோ அருள்வீசும்-இரு
மலர்விழிகள் நமக்காக ஒளிவீசும்
மன்னவன் புகழ்பாட வாழ்வினிக்கும்-நல்
மனமுடன் நினைத்தாலே துயர்பறக்கும்

- மந்த்ராலயம்

தேனினும் இனிந்திடும் குருநாமம்-நம்
தேவைகள் தந்தருளும் குருநாமம்
உலகினில் உயர்ந்தது அவன் நாமம்-நாம்
உயர்ந்திட திருவருளை தரும்நாமம்.

- மந்த்ராலயம்

# மந்த்ராலயம் உன்னை அழைக்கின்றது

மந்த்ராலயம் உன்னை அழைக்கின்றது-மனமே
மாபெரும் செல்வங்கள் கொடுக்கின்றது
துங்கா நதியோரம் இருக்கின்றது-அருள்
மங்காத பெருவாழ்வு நிலைக்கின்றது
- மந்த்ராலயம்

தேஜோ மயமான பிருந்தாவனம்-சுவை
தேனாகும் திகட்டாது அருளாலயம்
குருராக வேந்திரரின் புகழ்பாடியே-இந்த
குவலயம் சிறந்தோங்க திகழ்கின்றது
- மந்த்ராலயம்

ராமனின் திருநாமம் கேட்கின்றது-சுக
ராகமும் தாளமும் இனிக்கின்றது
உன்னத மனங்களில் இருக்கின்றது-உயர்
பண்பெனும் பாதையை கொடுக்கின்றது.
- மந்த்ராலயம்

# ராமகிருஷ்ண பரம ஹம்சர்

ராம கிருஷ்ண பரம ஹம்சர்
மலரடி பணிவாய் - மனமே
நன்மை தரும் அவரது நாமம்
நாளும் சொல்லுவாய்

- ராம

குரு நாதர் வந்து அமர்ந்தார்
தட்சி ணேஸ்வரம்-மன
குறைகள் நீங்க வரங்கள் தருவார்
என்றும் ஆயிரம்

- ராம

வங்கம் தந்த மாபெரும் சிங்கம்
இவரது சீடர் - என்றும்
வாழ்வு நன்கு சிறந்து விளங்க
வழிகள் சொன்னவர்

- ராம

அன்னை சாரதா அகம் மகிழ
அருகில் வாழ்ந்தவர் - தன்
அன்பை தந்தே காளியின் வடிவாய்
கண்டு மகிழ்ந்தவர்.

- ராம

# சாரதா தேவி அன்னை

சாரதா தேவி அன்னை
காளியின் வடிவம் - நம்
சத்குரு பரம ஹம்சர்
கருணையின் வடிவம்

- சாரதா

வங்கத்து தேசம் தன்னில்
வந்து பிறந்தாள் - நம்
வாழ்வினிலே வளம் சேர்க்க
அன்பை சுரந்தாள்

- சாரதா

குருதேவர் கட்டளை படியே
கனிவுடனே வாழ்ந்தாள் - இந்த
குவலயம் சிறந்து ஓங்க
அருளினையே பொழிந்தாள்

- சாரதா

அன்னையும் குருவும் ஓர்வடிவம்
அறிந்திட வேண்டும் - என்றும்
அன்புடனே புகழைப் பாடி
சிறந்திட வேண்டும்.

- சாரதா

# சுவாமி விவேகா னந்தர்

சுவாமி விவேகா னந்தர் பாதம்
நாளும் பணிவோமே-பல
சாதனை புரியும் வாக்கினை கேட்டு
வாழ்வில் உயர்வோமே

- சுவாமி

பாரதி போலே மனதில் உறுதியை
பதித்திடச் சொன்னார்-வாழ்வில்
வெற்றி மேல் வெற்றிகள் பெறவே
வழிகளும் தந்தார்

- சுவாமி

சீறிடும் சிங்கம் போலே பார்வை
அவரது சிறப்பு - நாம்
சிறந்தே வாழ்ந்திட பணிந்து மகிழ்வது
நமது பொறுப்பு

- சுவாமி

குமரிக் கடலலை பாறையின் மேலே
ஞானம் பிறந்தது - இந்த
ஞான பாலகன் வரவால் பூமியும்
நன்கு சிறந்தது.

- சுவாமி

# குவலயம் தழைக்கவந்த குருதெய்வம்

குவலயம் தழைக்கவந்த குருதெய்வம் - பாபா
குழைந்திடும் கனிவாலே அருள்தரும் தெய்வம்
- குவலயம்

ஷீரடி திருத்தலத்தில் குருவானார் - நல்
சீருடன் சிறப்பளித்து திருவானார்
- குவலயம்

அழகுடன் திருக்கோயில் ஒளிவீசும் - உயர்
அன்புடன் அறம்சேர்த்து புகழ்பேசும்
எளிமையின் திருக்கோலம் சாயிபாபா - நம்
எல்லோர்க்கும் குருதெய்வம் சாயிபாபா
- குவலயம்

வேப்ப மரத்தடியில் தவமிருந்தார் - பாபா
வேதனை நீக்கிடவே மனம்கனிந்தார்
நாமங்கள் பாடிடவே நலம்தந்தார் - நாம்
நாடியே துதித்தாலே வளம்தந்தார்.
- குவலயம்

# ஷீரடி அழகிய திருத்தலமே

ஷீரடி அழகிய திருத்தலமே-அங்கு
சென்றால் நமக்கு வரும்நலமே
கோதா வரிக்கரை அருகிருக்கும் - என்றும்
கோலா கலமாய் அதுசிறக்கும்

- ஷீரடி

பக்கிரி உருவினில் குருவந்தார் - தன்
பதமலர் தன்னில் அருள்தந்தார்
நீரை நிறைத்து விளக்கெரித்தார் - உயர்
நிர்மல ரூபனாய் வினைகளைந்தார்

- ஷீரடி

அக்னி குண்டத்தில் நீறுவரும் - அதை
அன்புடன் அணிந்தால் பேறுதரும்
என்றும் ஷீரடி ஒளிவீசும் - வெகு
எழிலாய் பாபா புகழ்பேசும்.

- ஷீரடி

# பாபாவின் திருவடி

பாபாவின் திருவடி பதிந்தது ஷீரடி - தினம்
பணிவுடன் பணிந்தாலே அருள்தரும் திருவடி
- பாபா

பாபாவின் நாமமே பக்திக்கு முதல்படி - இந்த
பாரினில் உயர்ந்திடவே அவர்நாமம் தினம்படி
- பாபா

அற்புதங்கள் புரிந்தே அழைத்திடும் வரும்படி-அங்கு
அன்புடன் சென்றாலே தந்திடும் வரும்படி
வாழ்வினில் உயர்ந்திட இருக்குது பலபடி - நாம்
வணங்கிட வாழ்த்திடுமே ஆலயத் திருப்படி
- பாபா

# சமதர்ம பூஞ்சோலை ஷீரடிதான்

சமதர்ம பூஞ்சோலை ஷீரடிதான் - நம்
சத்குரு பாபாவாழும் ஷீரடிதான்
சாந்திக்கு மறுபெயர் ஷீரடிதான் - என்றும்
சகலமும் வழங்கிடும் ஷீரடிதான்
- சமதர்ம

எழில்கொஞ்சும் அருட்சோலை ஷீரடிதான்-மிக
எளிதாய் காத்தருளும் ஷீரடிதான்
துவாரகமாயி என்னும் ஷீரடிதான்-வரும்
துன்பம் துடைத்திடும் ஷீரடிதான்
- சமதர்ம

பக்தர்கள் தினம்கூடும் ஷீரடிதான்-குரு
பாபா இசைகேட்கும் ஷீரடிதான்
அற்புத ஒளிவீசும் ஷீரடிதான்-பல
அதிசயம் தினம்நடத்தும் ஷீரடிதான்.
- சமதர்ம

# ஷீரடி தலத்தினில்

ஷீரடி தலத்தினில் பறந்திடும் குயில்கள்
பாபா நாமங்கள் பாடும்-அது
பணிவுடன் சன்னதி பணிந்தே தினமும்
பாபா பாதங்கள் தேடும்

- ஷீரடி

வீசிடும் தென்றல் பேசிடும் மொழியால்
பாபா நாமங்கள் இசைக்கும்-அது
தேனினும் இனிய தெள்ளமுதாய் வந்து
தேவ கானமாய் இனிக்கும்

- ஷீரடி

ஓடிடும் மேகங்கள் ஒருமனதாய் நின்று
பாபா என்றே துதிக்கும்-தன்னை
நாடிடும் அன்பர் கூட்டம் நடுவினில்
பாபா பெயரினை பதிக்கும்

- ஷீரடி

அக்கினி குண்டத்தில் தோன்றிடும் தீயும்
பாபா புகழினை உரைக்கும்-அதில்
தோன்றிடும் சாம்பல் பாபா அருளால்
அன்பர்கள் துன்பத்தை மறைக்கும்.

- ஷீரடி

# பக்கிரி ஒருவர்

பக்கிரி ஒருவர் ஷீரடி தன்னில்
பதம்தனை பதித்து வலம் வந்தார்
பகவான் உருவில் லீலைகள் புரிந்து
பணிவுடன் காட்சியை தினம் தந்தார் - பக்கிரி

அன்பர் ஒருவரால் பாபா என்றே
அழைத்திட பாபா பெயர் கொண்டார்
அல்லும் பகலும் அன்பர்கள் தருவதை
அமுதம் என்றே தினம் உண்டார் - பக்கிரி

கந்தல் உடையிலும் கருணை விழியிலும்
காலங்கள் போற்றிட எதிர் வந்தார்
காலமும் நேரமும் தானே என்று
காட்சியும் தந்து நலம் தந்தார்
- பக்கிரி

அணையா விளக்கினை அன்புடன் ஏற்றி
அற்புதம் பலவும் தான் புரிந்தார்
ஆயிரம் ஆயிரம் சித்துகள் புரிந்து
அன்பர்கள் மனதினில் தினம் நிறைந்தார்
- பக்கிரி

துவாரகா மயிஎனும் தூயதோர் ஆலயம்
தோன்றிட பாபா வழிபுரிந்தார்
துன்பம் நீக்கி இன்பம் பெருகிட
தூயநம் மந்திரில் தான் நிறைந்தார்.
- பக்கிரி

# கருணை தெய்வம் எனவந்தார்

கருணை தெய்வம் எனவந்தார்-பாபா
கழலடி பணிய அருள் தந்தார்
நாமங்கள் பாடிட நலம்தந்தார்-இந்த
நானிலம் செழித்திட வழிசெய்தார்

- கருணை

பாபா பெயரினில் குருவானார்-நம்
பாவங்கள் போக்கிட திருவானார்
சித்துகள் புரிந்து மேலானார்-நம்
சிந்தையில் நிறைந்து அருளானார்

- கருணை

ஜாதியும் மதமும் அவர்க்கில்லை-உயர்
சமத்துவ பண்பே அவர்எல்லை
அவனியில் அவர்போல் தெய்வமில்லை-அவர்
அருளுக்கு நிகராய் வேறில்லை

- கருணை

# சத்தியத் திருவுருவம்

சத்தியத் திருவுருவம் ஸ்ரீசாயிபாபா-நல்ல
சாந்த ஸ்வரூபன் ஸ்ரீசாயிபாபா
சரணம் எனப்பணிய ஸ்ரீசாயிபாபா-மன
சங்கடம் நீக்கிடுவார் ஸ்ரீசாயிபாபா

- சத்தியத்

ஷீரடி திருத்தலத்தில் வந்துநின்றார்-தன்
சிங்கார புன்னகையால் நமைவென்றார்
மகிழ்வுடன் உபதேசம் பலசொன்னார்-இந்த
மண்ணிலே குருவாகி மனம்நின்றார்

- சத்தியத்.

தவம்பல புரிந்து தனித்திருந்தார்-இந்த
தாரணி புகழ்பாட சிறந்திருந்தார்
என்றும்நம் துணையாகி அவரிருந்தார்-பல
ஏற்றங்கள் தனைதரவே மனம்கனிந்தார்

- சத்தியத்

அருள்தரும் திருக்கரத்தை காட்டிடுவார்-தினம்
அண்டிவரும் பிணிபலவும் ஓட்டிடுவார்
சித்துகள் பலசெய்து காட்டிடுவார்-நம்
சித்தமெல்லாம் அன்பை ஊட்டிடுவார்.

- சத்தியத்

# சாயிராம் சாயிராம் என்று பாடுவோம்

சாயிராம் சாயிராம் என்றுபாடுவோம்-மன
சாந்திதரும் நாமம்தனை சேர்ந்துபாடுவோம்
- சாயிராம்

ஷீரடி திருத்தலத்தில் ஒன்றுகூடுவோம்
சீர்படவே திருவடியை நாளும் தேடுவோம்
- சாயிராம்

வேப்ப மரத்தடியே பாபாவின்வீடுதான்-மனம்
வேண்டுதல் பலித்திட பாடும் அன்போடுதான்
தெய்வத்தின் அவதாரம் அவரது ரூபமே-நல்
தேனினும் இனித்திடும் சாயிராம் நாமமே
- சாயிராம்

தத்துவம் தருவார் அற்புதம் புரிவார் - நல்
தாமரைப் பாதனே சாயி பாபா
இப்புவி சிறந்திட நற்பதம் அருள்வார்
நாயகனே நமது சாயி பாபா.
- சாயிராம்

# இறைவனின் அவதாரம்
## ஷீரடி சாயிராம்

இறைவனின் அவதாரம் ஷீரடிசாயிராம்-என்றும்
இன்பமே தருவான் ஷீரடிசாயிராம்
சிந்தையில் நிறைவான் ஷீரடிசாயிராம்-நல்
சீருடன் சிறப்பருள்வான் ஷீரடிசாயிராம்
- இறைவனின்

வந்தவர்க்கு அருளை வழங்கிடும் சாயிராம்-என்றும்
வணங்கிட அருள்தருவான் வள்ளலே சாயிராம்
எளிமையின் திருவுருவம் எங்களின் சாயிராம்-நல்
ஏற்றமே தினமருள்வான் ஷீரடி சாயிராம்
- இறைவனின்

வேப்பமரத்தடியில் அமர்ந்தவன் சாயிராம்-நம்
வேதனைகள் போக்கிடும் ஷீரடிசாயிராம்
நினைத்ததை நடத்திடும் நிர்மலன் சாயிராம்-நம்
நினைவினில் நின்றருளும் ஷீரடிசாயிராம்
- இறைவனின்

# சத்திய திருவுருவே சாயிபாபா

சத்திய திருவுருவே சாயிபாபா-அருள்
நித்தியம் வழங்கிடும் சாயிபாபா
சந்ததம் நினைத்தால் சாயிபாபா-மன
சாந்தியை அளித்திடுவார் சாயிபாபா

- சத்திய

வேப்ப மரத்தடியில் அவர்வீடு-உன்
வேதனை நீங்கிடவே புகழ்பாடு
அன்புடன் அவரையே தினம்நாடு-உனக்கு
அருள்தனை தருவாரே அன்போடு

- சத்திய

அழகாய் நிறைந்தது ஷீரடிதான்-நம்மை
அனுதினம் காத்திடும் மலரடிதான்
பாபா நமக்கு முதல்படிதான்-அவரை
பணிந்தால் வருமே வரும்படிதான்

- சத்திய

# பாபா என்றொரு அவதாரம்

பாபா என்றொரு அவதாரம்-நமக்கு
பகவான் அனுப்பிய ஆதாரம்
அவனியில் அவரது பாதாரம்-அது
அன்புடன் நீக்கிடும் சேதாரம்

- பாபா

ஜாதிமதம் என்பதெல்லாம் அவர்க்கு இல்லையே
-மன
சாந்திவேண்டி செல்பவர்க்கு குறைகளில்லையே
உண்மையான வெள்ளைமனம் என்றும்
வேண்டினார்-நாம்
உயர்ந்துவாழ நல்லசெயல் செய்யதூண்டினார்

- பாபா

வந்தசெல்வம் எல்லாமும் வாரிவழங்கினார்-நாம்
வந்தவழி செம்மையுற அன்பை முழங்கினார்
ஏற்றதாழ்வு என்பதுவோ அவரிடமில்லை-நமக்கு
என்றுமன்பை பொழியாமல் இருந்ததுமில்லை

- பாபா

# பாபா என்றால் நாவினிக்கும்

பாபா என்றால் நாவினிக்கும்-அவர்
பதமலர் பணிந்தால் வாழ்வினிக்கும்
அன்புடன் கண்டால் மனமினிக்கும்-நாம்
அவர்புகழ் பாடிட புவிசிறக்கும்

- பாபா

ஷீரடி என்பது திருத்தலமாம்-சாயி
திருவடி நினைந்தால் நலம் வருமாம்
வாழ்வினில் என்றும் வளம் வருமாம்-இந்த
வையகம் வாழ்த்திடும் புகழ் வருமாம்

- பாபா

உண்மை அன்பே அவர்வேதம்-அதை
உயர்வாய் பாடிடும் சங்கீதம்
ஆலய மணியின் ஒலிநாதம்-அது
அறவே நீக்கிடும் மனபேதம்

- பாபா

# பாபாவை கண்டவுடன் பக்தி பிறக்குது

பாபாவை கண்டவுடன் பக்தி பிறக்குது-அவர்
பார்வையிலே நமக்கெல்லாம் அருளும் சுரக்குது
குருநாதன் நாமமதில் நாவினிக்குது-அதை
கூடி தினம் வாழ்த்தினாலே நலமும் செழிக்குது
- பாபாவை

அருளாளன் திருமுகத்தில் அன்பிருக்குது-அவரை
அனுதினமும் காண்பவர்க்கு வாழ்வினிக்குது
ஆசிகளை அள்ளிதரும் கரமிருக்குது-அதை
அன்புடனே வேண்டுவோர்க்கு தினம் கொடுக்குது
- பாபாவை

அன்புஉண்மை பண்புஎன்று ஓதிநின்றவர்-உயர்
ஆண்டவனின் நாமம்தனை ஓதச்சொன்னவர்
அழகுநிறைந்த ஷீரடியில் கோயில்கொண்டவர்-
- நல்ல
அற்புதங்கள் பலபுரிந்து உயர்ந்துநின்றவர்
- பாபாவை

# அண்ணா மலையில்

அண்ணா மலையில் யோகி தரிசனம்
அருளை அள்ளித் தருமே-அவர்
அழகு நிறைந்த கருணைப் பார்வை
அகிலத்தை வலமே வருமே

- அண்ணா

காசி நகரினில் கல்வி பயின்று
கடவுளை நன்கு அறிந்தார்-நல்ல
கடவுளின் சீடர்கள் பலரைப் பணிந்தே
நற்செயல் ஆயிரம் புரிந்தார்

- அண்ணா

கையில் விசிறியும் தலையில் முண்டாசும்
இரண்டும் இவரது சிறப்பு-என்றும்
கண்டு மகிழ்ந்தே ஆசிகள் வேண்டி
வாழ்வதும் நமது பொறுப்பு

- அண்ணா

ராம நாமமே நலமே தருமே
என்றே தினமும் சொல்லுவார்-அந்த
ராம நாமத்தை நாளும் சொல்லி
நமது குறைகளை வெல்லுவார்

- அண்ணா

# தீபச் சுடரொளி

தீபச் சுடரொளி வீசிடும் அண்ணா
மலையினில் யோகி அழைக்கிறார்-நம்
தீமைகள் மாற்றி திருவருள் சேர்க்க
நாளும் அன்பாய் உழைக்கிறார்

- தீபச்

காசியில் வளர்ந்து கடவுளை காண
கால்நடை யாய்வலம் வந்தார்-மன
கனிவினை வழங்கும் அண்ணா மலையினில்
தங்கியே அருளும் தந்தார்

- தீபச்

நினைத்ததும் முக்தி அளித்திடும் அழகு
அண்ணா மலைவந்து அமர்ந்தார்-நல்ல
நிர்மல வடிவம் அரவிந்தர் ரமணர்
இருவரை பணிந்தே சிறந்தார்

- தீபச்

பூமியில் வந்த புண்ணிய புருஷர்
ராம் சுரத் குமார் - இந்த
புவனம் செழித்திட அருளைத் தருவார்
ராம் சுரத் குமார்.

- தீபச்

# ராமஜெயம் ஸ்ரீ ராமஜெயம்

ராமஜெயம் ஸ்ரீ ராமஜெயம்
ராமனின் அருளால் ஏதுபயம்

- ராமஜெயம்

அனுமனின் இதயத்தில் ராமஜெயம்-நல்
அன்பர்கள் மனதிலும் ராமஜெயம்
வையத்தில் என்றும் ராமஜெயம்-தினம்
வாழ்த்தி போற்றிட ராமஜெயம்

- ராமஜெயம்

வாழ்வினில் ஒளிவிட ராமஜெயம்-நல்
வளமே பெருகிட ராமஜெயம்
அடியவர் பாடிடும் ராமஜெயம்-உயர்
அறமே வளர்த்திடும் ராமஜெயம்

- ராமஜெயம்

# வேண்டிய வரமருள்வாய்

வேண்டிய வரமருள்வாய் வெங்கடேசா-வேத
வடிவினில் கோயில்கொண்ட திருமலைவாசா

- வேண்டிய

மரகத மலைவாழும் ஸ்ரீனிவாசா-பொன்
மயமாய் வீற்றிருக்கும் அருள்நேசா

- வேண்டிய

அலர்மேல் மங்கையின் துணையானாய்-அருள்
சீதா ராமனாக அவதரித்தாய்
பக்தியுடன் மலையேறி சன்னதியில்-உந்தன்
பதம்தனை பணிவோரை காத்துநின்றாய்

- வேண்டிய

அழகாய் ஒளிரும் திருக்கோயில்-பெரும்
அற்புதங்கள் நிகழ்த்தும் திருவாயில்
மின்னிடும் திருமேனி அருள்வீசும்-என்றும்
பொன்னுடன் மணிதாங்கி புகழ்பேசும்

- வேண்டிய

# வேங்கடவன் கோயிலிலே

வேங்கடவன் கோயிலிலே வேதங்கள் ஒலிக்குது
-தினம்
வேண்டிவரும் பக்தர்களின் கனவும் பலிக்குது
கோவிந்தனின் நாமம்தானே எங்கும் கேட்குது-நாம்
கோடிமுறை பாடிப்பணிய வாழ்வும் இனிக்குது
- வேங்கடவன்

திருமலைமேல் பெருமானின் திவ்ய தரிசனம்-என்றும்
திகட்டாது மனதில் என்றும் பேரானந்தம்
விஸ்வரூப சேவையிலே வேதனைகள் பறக்குது
-வரும்
வினைகள்மாற்றி இன்பம்சேர பிறவி சிறக்குது
- வேங்கடவன்

அலர்மேலு அன்னையவள் அருகில் இருப்பாள்-தன்
அன்பைதந்து ஆட்சிசெய்து நம்மை அழைப்பாள்
கல்யாண கோலம்கண்டால் கவலை மறக்கலாம்
-இந்த
கலிகால தெய்வம்கண்டு நெஞ்சம் கனிக்கலாம்
- வேங்கடவன்

# மலர்மங்கை தினம்மகிழும் மலைவாசனே

மலர்மங்கை தினம்மகிழும் மலைவாசனே-எங்கள்
மனம்மேவும் மாமலையின் ஸ்ரீநிவாசனே
- மலர்மங்கை

மலைஏழு தனில்வாழும் மகராஜனே-ஏழு
மலைபோல செல்வம்கொண்ட சுகராஜனே
- மலர்மங்கை

ஆழ்வார்கள் பாடிநின்ற பெரும்பதியே-அதை
அன்போடு பாடினால் வரும்நிதியே
அகிலத்தின் முதலான அதிபதியே-நல்
அருளோடு பொருள்தருவாய் குணநிதியே
- மலர்மங்கை

# ஒப்பிலாத பெருமாள்

ஒப்பிலாத பெருமாள் சரிதம் ஒப்பிலாதது-அவர்
ஒருமையுடன் உண்ணும் அமுதம் உப்பிலாதது
பெருமானின் திருமணக் கோலம் ஈடிலாதது-அவர்
பேரருளே நமக்கு என்றும் இணையிலாதது
- ஒப்பிலாத

மார்கண்ட முனிவர் குழந்தை பூமிதேவியாய்-வந்து
மாதவனை வணங்கி நின்றாள் அன்பின்சிகரமாய்
தேவியவள் பெருமானின் அருளை வேண்டினாள்
-நம்
தேவைகளை தந்தருள் அவரை தூண்டினாள்
- ஒப்பிலாத

சாலிக்ராம சஹஸ்ர நாம மணிமாலைகள்-பூண்டு
சந்ததமும் அருளுவதே ஐயன் வேலைகள்
வணங்கிவரும் அடியாரை வாழ்த்தி நிற்பதாய்-அழகு
வரமருளும் கையைகாட்டி உயர்ந்து நிற்கிறான்
- ஒப்பிலாத

திருமலை பெருமானுக்கு அண்ணனானவர்-தன்
திருவருளை தருவதில் என்றும் மன்னனானவர்
பூமிதேவி மார்க்கண்டேயர் உடனிருக்க-இந்த
பூதலத்தை காத்துநின்றார் ஒப்பிலியப்பன்.
- ஒப்பிலாத

# ஒப்பிலியப்பன் திருக்கோயில்

ஒப்பிலியப்பன் திருக்கோயில் அழைக்கின்றது
-என்றும்
ஒப்பிலாத பெருமாள்புகழை உரைக்கின்றது
- ஒப்பிலியப்பன்

நெஞ்சையள்ளும் தஞ்சைபக்கம் இருக்கின்றது
-அழகு
கொஞ்சிவரும் சோலைகள் நடுவே சிரிக்கின்றது
- ஒப்பிலியப்பன்

ஒப்பிலாத பெருமாளென்றே பெயருண்டு-அமுது
உப்பிலாது தந்தால்ஏற்பார் சுவைகொண்டு
அன்னைபூமி தேவியோடு அருகிருப்பார்-வரும்
அன்பர்குறை தீர்த்துஎன்றும் அருள்கொடுப்பார்
- ஒப்பிலியப்பன்

திருப்பதி வேண்டுதலை இங்குதரலாம்-அந்த
திருமலை பெருமாள் அருளும் இங்குபெறலாம்
திவ்யதேச திருப்பதியில் ஒன்றாகும்-ஐயன்
திருவருளை பெறவேபணிதல் நன்றாகும்
- ஒப்பிலியப்பன்

# வையாலூர் வாசன் வரம்தருவான்

வையாலூர் வாசன் வரம்தருவான்-நாம்
வணங்கிட திருவருளை தினம்புரிவான்
- திருமலை வையா

தேடியதை தந்திடும் தென்திருப்பதி-உயர்
தேவாதி தேவர்தொழும் நற்பெரும்பதி
- திருமலை வையா

வேங்கடவன் மலைபோலே உயர்ந்திருக்கும்
-இங்கே
வேதமும் நாதமும் நிறைந்திருக்கும்
அலர்மேலு மங்கையருள் சிறந்திருக்கும்-நல்
அற்புதத் தமிழோசை பிறந்திருக்கும்.
- திருமலைவையா

சிங்கார கொலுவிருக்கும் சிறியதிருவடி-என்றும்
மங்காது புகழுரைக்கும் பெரியதிருவடி
அன்புடன் மணிக்கதவு வரவேற்கும்-அது
அனந்தனின் பெயர்சொல்ல தினங்காக்கும்
- திருமலை வையா

# ராதையின் நெஞ்சில்

ராதையின் நெஞ்சில் கண்ணன் இனிப்பது
அன்பின் அடையாளம்-அந்த
அன்பின் வடிவாய் கண்ணன் சிரிப்பது
அருளின் அடையாளம்

- ராதை.

எங்கும் நானே எதிலும் நானே
என்றவன் ஸ்ரீ கண்ணன் -தினம்
செய்யும் செயலும் சேர்ந்திடும் பலனும்
எல்லாம் ஸ்ரீ கண்ணன்

- ராதை

பார்த்தனின் தேரில் சாரதி வடிவில்
வந்தான் ஸ்ரீ கண்ணன்-குழல்
ஊதியே இசையினில் இனிமையை நாளும்
தந்தான் ஸ்ரீகண்ணன்

- ராதை.

கீதையின் நாயகன் கண்ணன் என்றே
காலம் சொல்கிறது-அந்த
கீதையின் போதனை ஏற்றால் துன்பம்
பனிபோல் செல்கிறது

- ராதை

# கண்ணனவன் குழலினிலே

கண்ணனவன் குழலினிலே கானமிசைத்தான்
- அந்த
கானமதில் அன்பைதந்து உலகையசைத்தான்
பாலகனாய் வந்துநின்று வெண்ணைபுசித்தான்
-அவன்
லீலைகளை பாடுமன்பர் நெஞ்சில்வசித்தான்
- கண்ணனவன்

ஆயர்கூட்டம் நடுவினிலே அன்பைதந்தவன்
-அழகு
ஆவினங்கள் அன்பினிலே தன்னைமறந்தவன்
பார்த்தனுக்கு பாடம்சொல்லி தேரில்வந்தவன்
-அன்று
பாரதப்போர் நடுவினிலே ஞானம்தந்தவன்
கண்ணனவன்

கருமமதை கண்ணாக செய்திடுஎன்றான்-வரும்
காலங்களில் பலன்களுமே வந்திடுமென்றான்
உலகிலுள்ள உயிர்களெல்லாம் நானேஎன்றான்
-தன்னை
உண்மையாக அழைத்திடவே வருவேனென்றான்
- கண்ணனவன்

சங்குடனே சக்கரமும் கையிலெடுத்தான்-உயர்
சங்கடங்கள் வரும்போது அதனைதடுத்தான்
விண்ணும்மண்ணும் போற்றிடவே எங்கும்
நிறைந்தான்-அழகு
விஸ்வரூப காட்சிதந்து நெஞ்சில்நிறைந்தான்
- கண்ணனவன்

# ஆலிலையின் மேலிருந்து அழகன் சிரிக்கிறான்

ஆலிலையின் மேலிருந்து அழகன் சிரிக்கிறான்
-மன
ஆறுதலை தந்துநின்று கண்ணன் சிரிக்கிறான்
- ஆலிலையின்

யாதவரின் குலத்திடையே குழந்தையானவன்
-அழகு
மாதவனாய் பெயரைக்கொண்டு மண்ணை
யாண்டவன்
- ஆலிலையின்

மண்ணையுண்டு மாயம்செய்து மன்னனானவன்
-இந்த
விண்ணில்பெரும் தெய்வமாக வந்துநின்றவன்
ராதைமனம் கண்டகண்ணன் வேதமானவன்-பல
ராகங்களின் நடுவில்நின்று கீதமானவன்
- ஆலிலையின்

பாரத்தில் தேரையோட்டி கீதை சொன்னவன்
-உயர்
பார்த்தனுக்கு பாடம்சொல்லி பாதை தந்தவன்
வெண்ணை தின்று வேய்ங்குழலில் பாட்டிசைத்
தவன்-இந்த
மண்ணளந்து மாயனாகி ஆட்சி செய்தவன்
- ஆலிலையின்

# குழந்தையவன் கண்ணன்புகழை குழலிசைக்குது

குழந்தையவன் கண்ணன்புகழை குழலிசைக்குது
-அழகு
மழலைபேசி கண்ணனெதிரில் மயங்கிநிற்குது
- குழந்தையவன்

ஆவின்கூட்டம் அவனைவேண்டி அழைத்து
நிற்குது- தன்
அன்புகலந்த பாலைதந்து மகிழ்ந்துநிற்குது
- குழந்தையவன்

யாதவரின் குலத்திடையே பாசம்பிறந்தது
- அதனால்
மாதவனாய் கோலம்கொண்டே அருளும்சுரந்தது
பார்த்தனுக்கு பாடம்சொல்லும் பணிவிருந்தது-உயர்
பாரதப்போர் நடுவினிலே துணிவிருந்தது
- குழந்தையவன்

நீலவண்ண கண்ணனழகில் கருணைபிறக்குது
- உயர்
நீலக்கடல் அலைகள்கூட அழகில்சிறக்குது
நாரணனின் பெயரைச்சொன்னால் நடனம்பிறக்குது
-அது
நால்வேத பொருளுரைத்து இன்பம் சுரக்குது
- குழந்தையவன்

# யாதவா் குலத்தில் மாதவன்

யாதவர் குலத்தில் மாதவன் இருந்தான்-உயர்
பாரதப் போரினில் கீதையாய் சிறந்தான்
கோபிகள் நடுவினில் குழந்தையாய் இருந்தான்
-வேய்ங்
குழலதை கொண்டு இசையினில் நிறைந்தான்
- யாதவர்

சங்குடன் சக்கரத்தை கையில் கொண்டவன்-நம்
சங்கடங்கள் நீக்கிடவே தேரில் வந்தவன்
ஆவின்கூட்டம் அருகினிலே ஆடி நின்றவன்
- அழகு
ஆயர்பாடி கண்ணனாக வந்து நின்றவன்
- யாதவர்

அலைகள்மீது நடனமாடி அழகு செய்தவன்-ஆய
கலைகள்நடுவில் நாயகனாய் வந்து நின்றவன்
கோதையவள் மாலையிலே கோலம் கொண்டவன்
-அழகு
ராதையவள் மனதில்நின்று மகிழ்வை தந்தவன்
- யாதவர்

# ராமனின் நாமம் தாரக மந்திரம்

ராமனின் நாமம் தாரகமந்திரம்-நம்
வாழ்வினில் ஒளிதரும் பேரருள் மந்திரம்
- ராமனின்

அனுமனின் இதயம் இசைத்திடும் மந்திரம்-நல்
அற்புதம் புரியும் அரியநல் மந்திரம்
- ராமனின்

கோசல நாட்டின் குணநல மந்திரம்
கோமகள் ஜானகி மனமகிழ் மந்திரம்
மிதிலையில் மிதந்து வந்தநல் மந்திரம்
கதியென பணிந்தால் காத்திடும் மந்திரம்
- ராமனின்

தசரதன் மகிழ்ந்த தத்துவமந்திரம்
தசமுகனை வென்ற சத்தியமந்திரம்
இலக்குவன் மனதில் இலங்கிய மந்திரம்
இகபர சுகமதை அளித்திடும் மந்திரம்
- ராமனின்

# ராமனை நீ நாடு

ராமனை நீ நாடு— ஸ்ரீ
ராமஜெயம் பாடு
நாடிய நன்மைகள் நம்மிடம் வந்திடும்
நாளும் நீ நாடு

- ராமனை

பங்குனி நவமியில் ராமன் பிறந்தான்
பாரினில் அன்போடு-என்றும்
பார்த்திட பார்த்திட பாவம் பறக்கும்
பரமனின் அடிகூடு
மனிதனின் உருவில் வந்தநல் தெய்வம்
மகிழ்வாய் பணிவோடு
உண்மை நேர்மை உயர்வே சொன்னான்
ஏற்பாய் கனிவோடு

- ராமனை

வாயு குமாரன் வணங்கிடும் தெய்வமாய்
வந்தவன் ஸ்ரீராமன்
வானமும் வையமும் வாழ்ந்திட வழிகளை
தந்தவன் ஸ்ரீராமன்
அன்னை ஜானகி அகமே மலர்ந்தான்
அயோத்தி அரசனவன்
அன்பர்கள் தினமும் அல்லும் பகலும்
போற்றிடும் மன்னனவன்

- ராமனை

# வில்லும் அம்பும் கொண்டவன்

வில்லும் அம்பும் கொண்டவன்
வீரனாகி வந்தவன்
சொல்லும் சொல்லில் அன்பினை
சோர்விலாமல் தந்தவன்

- வில்லும்

ராமன் என்னும் பெயரிலே
ராகமாகி நின்றவன்
மனிதன் என்றும் மனிதனாய்
வாழவழி செய்தவன்

- வில்லும்

உண்மை அன்பு சத்தியம்
உயர்வெனவே சொன்னவன்
உள்ளும் புறமும் ஒன்றென
ஓதிநின்ற மன்னவன்

- வில்லும்

அழகு மிதிலை நகரினில்
அன்னையவளை ஏற்றவன்
அன்புதம்பி லக்ஷ்மணன்
அருந்துணையை ஏற்றவன்

- வில்லும்

அகந்தை கொண்ட ராவணன்
ஆணவத்தை வென்றவன்
நாட்டை ஆள மன்னனாய்
நன்மை செய்ய வந்தவன்

- வில்லும்

# அயோத்தி நகரினில்
# அன்பும் அறமும்

அயோத்தி நகரினில் அன்பும் அறமும்
மானுட உருவில் பிறந்தது
அன்பர்கள் அனுதினம் போற்றிட அழகு
ராமன் வடிவாய் திகழ்ந்தது

- அயோத்தி

இன்பம் துன்பம் இரண்டும் ஒன்றென
இதமாய் உலகினில் சொன்னது
இன்பம் கொண்டு வாழ்வில் அதனை
பாடம் எனவே தந்தது

- அயோத்தி

மிதிலா புரியின் ஜானகி தன்னை
வில்லால் தனதாய் கொண்டது
வில்லும் அம்பும் கொண்டே புதிய
வீரம் உலகில் படைத்தது

- அயோத்தி

வாயு குமாரன் வானர வீரன்
அனுமனை துணையாய் கொண்டது
மன்னன் ராவணன் வீரம் அதனை
லங்கா நகரினில் வென்றது

- அயோத்தி

# பூபாளம் இசைக்கும்
# பூங்கதவு திறக்கும்

பூபாளம் இசைக்கும் பூங்கதவு திறக்கும்-எழில்
பொன்னம்பல வாசனவன் பூமுகமோ சிரிக்கும்
- பூபாளம்

கார்த்திகையும் பிறக்கும் கவலைகளும் மறக்கும்
கனகமணி கண்டனையே காணமனம் துடிக்கும்
- பூபாளம்

சரணம்பாட இனிக்கும் சந்ததமும் நினைக்கும்
-நல்
சந்தணமும் பன்னீரும் சன்னதியில் மணக்கும்
இருமுடிகள் தலைகள்மீது இன்பமுடன் இருக்கும்
- சரணம்
இனிமையுடன் நாம்பாட ஐயனருள் சுரக்கும்
- பூபாளம்

பந்தளத்து குழந்தைமுகம் பார்த்துமனம் லயிக்கும்
- தினம்
வந்தவினை யாவையுமே ஓடிடவே துடிக்கும்
நெய்யினாலே அபிஷேகம் நேர்த்தியுடன்
நடக்கும்-அழகு
மெய்யனவன் மேனிதினம் ஜோதியிலே
ஜொலிக்கும்
- பூபாளம்

# கற்பூரம் கரைந்திடும்

கற்பூரம் கரைந்திடும் இங்கே-அன்பர்
கவலைகள் மறைந்திடும் அங்கே
நெய்யெல்லாம் மணந்திடும் இங்கே-நம்
மெய்யெல்லாம் சிலிர்த்திடும் அங்கே

- கற்பூரம்

ஐயன் திருநாமம் இங்கே-ஸ்வாமி
அழகு தரிசனம் அங்கே
முற்றிய தேங்காய் இங்கே-அருள்
முக்தியே கிடைத்திடும் அங்கே

- கற்பூரம்

பதினெட்டு படிதாண்டல் அங்கே-அரியா
பாவங்கள் மறைந்திடும் இங்கே
இருமுடி செல்லுது இங்கே-நம்
இடரெல்லாம் போகுது அங்கே

- கற்பூரம்

பூஜைகள் செய்வது இங்கே-பல
புதுமைகள் காண்பது அங்கே
விளக்கை ஏற்றுவது இங்கே-மகர
விளக்கொளி காண்பது அங்கே

- கற்பூரம்

# மணிகண்டன் என்முன்னே வரவேண்டும்

மணிகண்டன் என்முன்னே வரவேண்டும்-எனக்கு
மணியான பாடல்கள் தரவேண்டும்
என்நாவில் அவன்நாமம் வேண்டும்- அது
எப்போதும் எனைகாக்க வேண்டும்
- மணிகண்டன்

மகிழ்வோடு மாலையிட வேண்டும்-முழு
மனதோடு நோன்பிருக்க வேண்டும்
சரணங்கள் தனைபாட வேண்டும்-ஐயன்
சந்தோஷ காட்சிதர வேண்டும்
- மணிகண்டன்

பம்பையில் நீராட வேண்டும்-ஐயன்
பரிவோடு அருள்சேர்க்க வேண்டும்
படியேறி முகம்காண வேண்டும்-அருள்
பார்வையில் நலம்சேர்க்க வேண்டும்
- மணிகண்டன்

இருமுடியை நான்தரவும் வேண்டும்-தினம்
இருவேளை புகழ்பாட வேண்டும்
வழியெங்கும் அவன்நினைவே வேண்டும்-வீண்
பழிபோக துதிசெய்ய வேண்டும்
- மணிகண்டன்

# அன்பின் வடிவம்

அன்பின் வடிவம் அழகின் சிகரம்
ஸ்வாமி ஐயப்பா-இந்த
அவனியில் வாழும் உயிர்களுக் கெல்லாம்
தெய்வம் நீயப்பா

- அன்பின்

மகிழ்வுடன் மலைமேல் மணிகண்டன் உருவில்
வாழ்வது மெய்யப்பா-துளசி
மாலை யணிந்து சரணம் பாடிட
அருள்வாய் ஐயப்பா

- அன்பின்

சரணங்கள் பாடி சன்னதி நாடி
வந்தால் ஐயப்பா-உன்
சந்திர முகமே சர்வமும் தருமே
ஸ்வாமி ஐயப்பா

- அன்பின்

இருமுடி கோடி திருப்படி நாடி
வருமே ஐயப்பா-எந்த
இன்னலும் தீரும் இன்பமே பெருகும்
ஸ்வாமி ஐயப்பா

- அன்பின்

# சபரிமலையில்

சபரி மலையில் வாழும் ஐயன்
என்னை அழைத்தான்-தினம்
சரணம் பாடி தன்னை நன்றாய்
பணிய அழைத்தான்

- சபரிமலையில்

மாலை போட்டு விரதம் ஏற்க
மகிழ்வுடன் பணித்தான்-என்றும்
எனது பூஜை அருகில் நின்று
என்னை கணித்தான்

- சபரிமலையில்

விளக்கின் ஒளியில் விஸ்வ ரூப
காட்சியை தந்தான்-வரும்
வினையை போக்கி நன்மை சேர்க்க
அருகினில் வந்தான்

- சபரிமலையில்

மலையில் மகர ஜோதி காண
என்றும் ஆனந்தம்- இந்த
மண்ணை ஆளும் தெய்வம் என்றும்
தருமே ஆனந்தம்

- சபரிமலையில்

# சரணம் சரணம் எனப்பாடு

சரணம் சரணம் எனப்பாடு-நீ
சங்கரன் மகனை அன்போடு
அடியார் திருக்கூட்டம் நீ கூடு-சபரி
ஆலயம் செல்வாய் பணிவோடு

- சரணம்

தலையது செல்லும் முடியோடு-அருள்
நிலையுடன் ஏறும் படியோடு
மலையது மேலே எழிலோடு-ஐயன்
சிலையாய் இருப்பான் கனிவோடு

- சரணம்

நெய்யதன் வாசம் மணத்தோடு-ஐயன்
மெய்யுடன் நிறையும் குணத்தோடு
சபரியின் யாத்திரை வனத்தோடு-நம்
சங்கடம் தீரும்முழு மனத்தோடு

- சரணம்

# மலையழைக்குது சபரி மலையழைக்குது

மலையழைக்குது சபரி மலையழைக்குது-அழகு
மண்ணின்மீது தானமர்ந்து நமையழைக்குது
- மலையழைக்குது
மலைக்கு செல்லும் மாந்தர்மார்பில் மணியிருக்குது
- அங்கு
மகிழ்வுடனே சென்றுவந்தால் பணிவிருக்குது
- மலையழைக்குது

மண்ணும் விண்ணும் போற்றும்மலையில்
படியிருக்குது-அந்த
படிகள் மீது செல்லும் தலையில் முடியிருக்குது
முடியினுள்ளே மூர்த்தியவன் நெய்யிருக்குது-அந்த
நெய்யதனை நாமும்தர மெய்சிலிர்க்குது
- மலையழைக்குது

நாமமதை நாம்சொல்ல நாவிருக்குது-அந்த
நாவின்துணை கொண்டுபாட பாவிருக்குது
பாட்டதனை பாடப்பாட மனமினிக்குது-அந்த
மனதுக்குள்ளே ஐயன்நினைவு தினமினிக்குது
- மலையழைக்குது

# சபரி மலைக்கு போகணுங்க

சபரி மலைக்கு போகணுங்க-தர்ம
சாஸ்தா தரிசனம் பண்ணணுங்க
இருமுடி காணிக்கை கொடுக்கணுங்க-வரும்
இடர்களை அவனே தடுக்கணுங்க

- சபரிமலைக்கு.

முறைகளை சொல்வார் குருசாமி-என்றும்
முன்னே நிற்பார் குருசாமி
காலையும் மாலையும் சரணம் சொல்லி - தூய
மாலையிட்டே புகழ் பாடணுங்க

- சபரிமலைக்கு.

மண்டல விரதம் ஏற்கணுங்க-நாம்
மலைமேல் ஜோதியை பார்க்கணுங்க
காடும் மேடும் கடக்கணுங்க-நம்ம
கடவுளை எண்ணி நடக்கணுங்க

- சபரிமலைக்கு.

பம்பை நதியில் குளிங்கணுங்க-பெரும்
பாவ வினைகளை போக்கணுங்க
பதினெட்டு படிகள் ஏறணுங்க-தலை
விதியும் அருளால் மாறணுங்க

- சபரிமலைக்கு.

நெய் அபிஷேகம் செய்யணுங்க-அதில்
ஐயப்பன் மேனி நிறையணுங்க
கற்பூர ஜோதியை பார்க்கணுங்க-எந்த
காலமும் அவன் நம்மை காக்கணுங்க

- சபரிமலைக்கு.

# நாமம் சொல்லி மாலை அணிந்தால்

நாமம் சொல்லி மாலை அணிந்தால்
நன்மை அடைந்திடலாம்-சபரி
நாதனின் பதமே கதியென கொண்டால்
மேன்மை அடைந்திடலாம்

- நாமம்

வில்லாளி வீரன் தரிசனம் காண
விரதம் ஏற்றிடணும்-வரும்
வினைகள் எல்லாம் மறைந்திட ஐயனின்
துணையை போற்றிடணும்

- நாமம்

தயவினை வேண்டி சரணங்கள் பாடி
தன்னை மறந்திடணும்-நமை
தாக்கிடும் தீய எண்ணங்கள் நீக்கி
தரணியில் சிறந்திடணும்

- நாமம்

நலமே வேண்டி நெய்யோடு தேங்காய்
நாமும் சேர்த்திடணும்-நம்
நாதனின் ஜோதியை மலைமேல் நாமும்
நன்றாய் பார்த்திடணும்

# ஒருமுறை சபரிக்கு சென்றால்

ஒருமுறை சபரிக்கு சென்றால்-வரும்
ஒவ்வொரு நாளும் சுகமே
ஒருமனதாய் பதம் பணிந்தால்-பல
நன்மைகள் எல்லாம் வருமே

- ஒருமுறை

கடும்பனி குளிரும் காற்றும்-நமை
கடவுளைப் போலவே போற்றும்
சரணம் நம்மையே தேற்றும்-உயர்
சஞ்சலம் தனையே மாற்றும்

- ஒருமுறை

நாற்பத்தி ஒருநாள் விரதமே-அது
நலம்தரும் ஐயனின் பதமே
இடர்களை களையும் தினமே-நல்ல
இன்பங்கள் தரும்அந்த கணமே

- ஒருமுறை

இருமுடி தாங்கிய தலைகள்-அவை
இறைவனை பாடிடும் அலைகள்
ஐயனின் ஆலயம் இனிமை-அது
அன்புடன் தருமே வலிமை

- ஒருமுறை

# மணிமாலை கழுத்துக்கு அழகு

மணிமாலை கழுத்துக்கு அழகு-சபரி
மலைமேலே ஐயனும் அழகு
சரணங்கள் சொல்லியே பழகு-ஐயன்
சரணார விந்தமும் அழகு

- மணிமாலை

எண்ணங்கள் ஆயிரம் இருக்கும்-அதில்
எப்போதும் நல்லதே பிறக்கும்
விரதங்கள் மனதினில் இனிக்கும்-நல்ல
விதமாகி எண்ணங்கள் பலிக்கும்

- மணிமாலை

சந்தனமும் திருநீறும் மணக்கும்-நல்ல
சந்தோஷ நினைவுகள் அளிக்கும்
நாமங்கள் ஊற்றாய் எடுக்கும்-நமக்கு
நலம்கூட்டி சக்தியை கொடுக்கும்

- மணிமாலை

ஓர்முறை மலைகாண சிறக்கும்-அது
மறுமுறை வாவென்று அழைக்கும்
பேரருள் நிறைவாக கிடைக்கும்-அங்கே
பேசும் தெய்வமோ சிரிக்கும்

- மணிமாலை

# ஹரிஹர சுதனே ஐயப்பா சரணம்

ஹரிஹர சுதனே ஐயப்பா சரணம்
என்றே நீதினம் பாடு
அன்புடன் அருளும் ஆயிரம் செல்வம்
அவனே தருவான் நாடு

- ஹரி ஹர

மாலை அணிந்து நோன்பினை ஏற்று
செல்வாய் அவனது வீடு
காலையும் மாலையும் சரணம் பாடும்
அடியார் கூட்டமே கூடு

- ஹரி ஹர

பாவங்கள் தீர்க்கும் பம்பா நதியினில்
பணிவுடன் குளியலை போடு
பந்தளக் குழந்தை பரிவுடன் காப்பான்
பாதார விந்தத்தை தேடு

- ஹரிஹர

மலைமேல் ஜோதி மன்னவன் அருளால்
மகிழ்வுடன் தோன்றும் பாரு
மங்களம் தந்திடும் ஐயன் நாமம்
மனதினில் அடிக்கடி கூறு

- ஹரி ஹர

# பந்தளத்து குழந்தைகாண

பந்தளத்து குழந்தைகாண பணிவு பிறக்கும்-சபரி
பகவானை பாடிடவே பிறவிசிறக்கும்
- பந்தளத்து

மாலைபோட்டு சரணம்பாட மனமே இனிக்கும்
- தினம்
காலைமாலை குளித்திடவே} இன்பம் சிலிர்க்கும்
- பந்தளத்து

இருமுடியை தலையில்தாங்க துன்பம் பறக்கும்-
நம்
இருவிழியில் தெய்வம்காண அன்பே சுரக்கும்
காட்டுவழி பாதை செல்ல கனிவு பிறக்கும்-
சரணம்
பாட்டுப்பாடி நின்றிடவே துணிவு பிறக்கும்
- பந்தளத்து

சன்னதியின் வாசலிலே நெய்மணம் வீசும்-மன
நிம்மதியே தந்துநின்று அவன்விழி பேசும்
கற்பூர ஜோதியினால் மலையில் ஒளிவீசும்-ஐயன்
பொற்பதங்கள் காட்சிதந்து புவியில் அருள்வீசும்
- பந்தளத்து

# சபரிமலை மீதினிலே ராஜகுமாரன்

சபரிமலை மீதினிலே ராஜகுமாரன்-மன
சங்கடங்கள் நீக்கிடுவான் யோககுமாரன்
பந்தளத்து தேசமதில் அழகுகுமாரன்-அழகு
பம்பாநதி பாடியாடும் பாலகுமாரன்
- சபரிமலை

புலிமீது அமர்ந்துவலம் வந்தகுமாரன்-தாய்
தலைவலியை நீக்கிநின்ற தங்ககுமாரன்
காட்டிடையே கனிவாக வாழும்குமாரன்-சபரி
மேட்டினிலே வாழ்ந்துநிற்கும் அன்புகுமாரன்
- சபரிமலை

இருமுடியை இன்பமுடன் கேட்கும்குமாரன்-தன்
இருவிழியால் கருணைதந்து காக்கும்குமாரன்
கற்பூர ஜோதியிலே நிறையும்குமாரன்-தன்
பொற்பதத்தை நமக்களிக்கும் நல்லகுமாரன்
- சபரிமலை

சரணகோஷம் சந்ததமும் கேட்கும்குமாரன்-மன
சாந்திதரும் இன்பநிலை சேர்க்கும்குமாரன்
வாபருக்கு தோழனாக வந்தகுமாரன்-நம்
வாழ்வினிலே துணைநின்று காக்கும்குமாரன்.
- சபரிமலை

# மணிகண்டன் தரிசனத்தால் மனதுநிறையுது

மணிகண்டன் தரிசனத்தால் மனதுநிறையுது-சபரி
மலைநோக்கி செல்கையிலே வாழ்வுநிறையுது
சரணங்கள் பாடும்போது கண்கள்கசியுது-அழகு
சாஸ்தாவை கண்டவுடன் மேனிசிலிர்க்குது
- மணிகண்டன்

எரிமேலி பேட்டை துள்ளல் வழியில்நடக்குது
- அன்பர்

கரிமலையை தாண்டும்போது காடும்மணக்குது
வன்புலிகள் வழியிலெங்கும் வந்துபோகுது-நம்
வாபர்தோழர் பெயரைசொன்னால் மறைந்துபோகுது
- மணிகண்டன்

இருமுடியை தலைசுமந்தால் இன்பம்சேருது-அது
இருவினைகள் தீர்க்கநல்ல வழியைசொல்லுது
கற்பூரஜோதி மலையில் காட்சிதருகுது-ஐயன்
பொற்பதத்தை காணநமக்கு ஆவல்பெருகுது.
-மணிகண்டன்

# பொன்னம்பல வாசனுக்கு பொன்னாபரணம்

பொன்னம்பல வாசனுக்கு பொன்னாபரணம்-அதை
போற்றிதினம் பாடும்அன்பர் எல்லாம்பெறணும்
இருமுடியை இன்பமுடன் நாமும்தரணும்-என்றும்
இன்னல்நீக்கும் சரணம்சொல்லி நாமும்தொழணும்
- பொன்னம்பல

கார்த்திகையில் மாலைபோட கனிவேவரணும்-இளங்
காலைமாலை குளித்துநிற்க பணிவேதரணும்
கடுங்குளிரும் பனிமழையும் உடலில்படணும்-நமக்கு
காந்தமலை ஜோதிநன்றாய் கண்ணில்படணும்
- பொன்னம்பல

காடுநிறை மேட்டுபள்ளம் காலில்படணும்-என்றும்
காலாலே நடந்துசெல்ல துணிவேவரணும்
ஐயனவன் நாமம்நாவில் நன்றாய்படணும்-மன
ஐயம்நீக்கி துன்பம்தனை தானும்விடணும்
- பொன்னம்பல

## ராமனின் நாமம்

ராமனின் நாமம் கேட்டால்-உடன்
ஓடியே வந்திடுவான்-அனுமன்
ராமனின் தூதனே என்றால்-நலம்
நாடியே தந்திடுவான்

- ராமனின்

புத்தியும் பலமும் செல்வமும் வீரமும்
எல்லாம் அவனருளே-தினம்
புகழ்ந்திட மனதில் பூவாய் மலர்ந்து
தருவான் திருவருளே

- ராமனின்

வேண்டுதல் நிறைந்திட வெண்ணை காப்பினில்
உண்மையாய் நிறைந்திடுவான்-என்றும்
வேண்டிடும் அடியவர் உள்ளம் நிறைந்து
அன்பாய் உறைந்திடுவான்.

- ராமனின்

# ஸ்ரீராமன் புகழெங்கு

ஸ்ரீராமன் புகழெங்கு கேட்டாலும்-அனுமான்
சிங்காரத் திருக்கோலம் கொள்வானே
ஸ்ரீராமன் திருநாமம் கேட்டாலே-அழகு
சிலையாகி அமர்ந்தருள் புரிவானே

- ஸ்ரீராமன்

மலைபோல திரண்டிருக்கும் கைகள்-சஞ்சீவி
மலைதன்னை ஏந்திநிற்கும் கைகள்
சமயத்தில் எதிர்வந்து அருள்வான்-சமய
சஞ்சீவியாய் மனதில் நிறைவான்

- ஸ்ரீராமன்

அன்னையாம் ஜானகி துயர்நீங்க-வானில்
அம்பென பறந்து உதவிசெய்தான்
அன்புடன் ஸ்ரீராம ஜெபம்செய்து-என்றும்
அகமே மகிழ்ந்து தினம்களித்தான்

- ஸ்ரீராமன்

# அஞ்சனை மைந்தனாய் அவனியில் அவதரித்த

அஞ்சனை மைந்தனாய் அவனியில் அவதரித்த
சுந்தர ரூபனாம் ஆஞ்சனேயன்
- அஞ்சனை

அன்புடன் பணிந்தால் உடன்வருவான்-நல்
அடியார்க்கு அருள்தனை தினம் தருவான்
- அஞ்சனை

பொறுப்புடன் போரினில் காத்து நின்று-ஸ்ரீ
ராகவன் அன்பினை தானடைந்தான்
அன்னையாம் சீதைக்கு ஆறுதல் சொல்லி
-என்றும்
ராமனின் பக்தனாய் துணை நின்றான்.
- அஞ்சனை

வீரமோ அனுமனின் புகழ்பாடும்-துயர்
வீழ்த்திட அவன்துணை தினம்நாடும்
நாமங்கள் பாடிட நலம்கூடும்
நாளும் போற்றிட வாழ்வில் வளம்சேரும்
- அஞ்சனை

# மாருதி நாமம் சொல்லுங்கள்

மாருதி நாமம் சொல்லுங்கள்-பக்தி
மனத்தின் வசமாய் நில்லுங்கள்
அனுமனின் சன்னிதி செல்லுங்கள்-உடன்
அறிவ துயரினை வெல்லுங்கள்

- மாருதி

அன்புடன் அடியினை பற்றுங்கள்-அவன்
ஆலயம் தன்னை சுற்றுங்கள்
ராம ஜபம்தனை பண்ணுங்கள்-உயர்
ராமனின் தூதனை எண்ணுங்கள்

- மாருதி

வேண்டுதல் தனிலே நிறைந்திடுவான்-அருள்
வேண்டிட அன்பை சுரந்திடுவான்
தூயவர் பக்தியில் கரைந்திடுவான்-என்றும்
துளசி மாலைதனில் ஒளிவிடுவான்

- மாருதி

# நினைத்ததும் வருவான்

நினைத்ததும் வருவான் நினைத்ததை தருவான்
நிர்மல ரூபன் ஹனுமான்
நேரமும் காலமும் எல்லாம் நன்றாய்
மாற்றியே அமைப்பவன் ஹனுமான்

- நினைத்ததும்

வேண்டுதல் தன்னை விரும்பியே தந்து
வெற்றிலை மாலை அணிவான்
நாடிடும் அன்பர் உள்ளம் நிறைந்து
நலமே தருவான் ஹனுமான்

- நினைத்ததும்

அன்புடன் துளசி மாலை அணிந்து
ராமனின் புகழை இசைப்பான்
அல்லும் பகலும் எல்லாம் அவனே
என்றே தினமும் உரைப்பான்

- நினைத்ததும்

ஆயிரத் தெட்டு சுற்றினில் ஹனுமான்
அகமே மிகவும் மகிழ்வான்
வெண்ணை காப்பினை மகிழ்வாய் ஏற்று
வேதனை தீர்த்தே மகிழ்வான்.

- நினைத்ததும்

# அனுமனை பாடுங்கள்

அனுமனை பாடுங்கள்—உடன்
அருகே வந்திடுவான்
அனுதினம் பாடுங்கள்-நல்
அகமே நிறைந்திடுவான்

- அனுமனை

நாமங்கள் சொன்னாலே—தினம்
நலமே தந்திடுவான்
பாவங்கள் போக்கிடவே-நம்
பக்கமே வந்திடுவான்

- அனுமனை

வெண்ணை காப்பணிந்து-மன
வேதனை நீக்கிடுவான்
துளசி மாலைகொண்டு-வரும்
துயரம் போக்கிடுவான்

- அனுமனை

# ஆஞ்சநேயா சரணம்

ஆஞ்சநேயா சரணம்
அனுமந்தனே சரணம்
பொற்பத ரூபனே சரணம்
புண்ணிய மைந்தா சரணம்

- ஆஞ்சநேயா

மாதவன் அன்பினை ராமனின் வடிவில்
மகிழ்வுடன் ஏற்றாய் சரணம்
மாதவம் செய்த ஜானகி அன்னை
மனதினில் நின்றாய் சரணம்
ராமனும் சீதையும் சேர்ந்திட உதவி
செய்தநல் சேவகா சரணம்
வணங்கிடும் அன்பர்கள் வாழ்வினில் அருளை
வழங்கிடும் வள்ளலே சரணம்

- ஆஞ்சநேயா

புத்தியும் பலமும் வீரமும் செல்வமும்
போற்றிட தருவாய் சரணம்
அவனியில் அன்பர் அழைத்திட என்றும்
அன்புடன் வருவாய் சரணம்
மார்கழி மூலம் தோன்றிய அழகு
மாபெரும் வீரனே சரணம்
மண்ணும் விண்ணும் போற்றிடும் வண்ணம்
மகிழ்வை தருவாய் சரணம்

- ஆஞ்சநேயா

# வாயு குமாரா வானர வீரா

வாயு குமாரா வானர வீரா
சரணம் சரணம் அனுமானே
ஸ்ரீராமனின் இதயம் என்றும் நிறைந்தாய்
நாங்கள் வணங்கும் பெருமானே

- வாயு

அன்பர்கள் பாடிடும் உந்தனின் நாமம்
தேனும் பாலாய் இனிக்கிறது
அதுவே வாழ்வின் துணையென வந்து
நாளும் நன்றாய் காக்கிறது

- வாயு

வேண்டுதல் தந்து வேதனை நீக்கிட
அனுமன் வடிவினில் வந்தாயே
அன்புடன் உன்னை என்றும் வணங்க
அன்பை எமக்கு தந்தாயே

- வாயு

உயர்வாய் உன்னை போற்றிடும் போது
உந்தன் உருவம் தெரிகிறது
உன்னை நினைக்க உலகினில் துன்பம்
உடனே பனிபோல் மறைகிறது

- வாயு

# அனுமனை நினை மனமே

அனுமனை நினை மனமே-உயர்
அற்புதம் வருமே அனுதினமே

- அனுமனை

வாயுவின் வேகம் அவனது வீரம்-நம்
வாழ்வினில் அவனே மாபெரும் சாரம்

- அனுமனை

இராமனின் உருவம் தாங்கிடும் இதயம்-பல
ராகங்கள் பாடி தேடிடும் அபயம்
அயோத்தி நகரினில் ராமனின் விஜயம் அதை
அன்புடன் செய்தது அனுமனின் உபயம்

- அனுமனை

பார்த்திட பெருகிடும் பரவசமே-தினம்
பண்புடன் பணிவார்க்கு நவரசமே
என்றுமே அடியார்கள் அவன்வசமே-பலம்
ஏற்றியே தருவான் நம்வசமே

- அனுமனை

# அஞ்சனை மைந்தனே அனுமானே

அஞ்சனை மைந்தனே அனுமானே-நல்
அருளினை அனுதினம் தருவோனே

- அஞ்சனை

புத்தியும் பலமும் உன்வசமே-உனை
புகழ்ந்திட தருவாய் என் வசமே

- அஞ்சனை

ராமனின் நிழலென நீ சென்றாய்-ஸ்ரீ
ராமனின் அன்பினை நீ வென்றாய்
சீதையை தேடி நீ கண்டாய்-அன்னை
சீர்மிகும் அன்பினை நீ உண்டாய்

- அஞ்சனை

சஞ்சீவி மலையோ அருமருந்து-அதை
கையினில் கொண்டாய் பெரும் விருந்து
உந்தனின் நினைவே துணையாகும்-அது
எந்தனின் வாழ்வில் அணையாகும்

- அஞ்சனை

# அனுமனைப் பாடுங்கள்

அனுமனைப் பாடுங்கள்-உடன்
அருகே வந்திடுவான்
அனுதினம் நாடுங்கள்-நல்
அகமே நிறைந்திடுவான்

- அனுமனைப்

நாமங்கள் சொன்னாலே-தினம்
நலமே தந்திடுவான்;
பாவங்கள் போக்கிடவே-நம்
பக்கமே வந்திடுவான்

- அனுமனைப்

வெண்ணை காப்பணிந்து-மன
வேதனை நீக்கிடுவான்
துளசி மாலைகொண்டு-வரும்
துயரம் போக்கிடுவான்

- அனுமனைப்

ஸ்ரீராம் ஜெயராம் ஜெயஜெய ராம்
ஸ்ரீராம் ஜெயராம் ஜெயஜெய ராம்

- அனுமனைப்

# சுந்தர ரூபன் சுகுண விலாசன்

சுந்தர ரூபன் சுகுண விலாசன்
ஜெய்ஜெய் அனுமான் ஜெய் அனுமான்
அருகினில் வருவான் அன்பினை தருவான்
ஜெய்ஜெய் அனுமான் ஜெய் அனுமான்

- சுந்தர

ராமனின் நாமம் பாடியே தினமும்
வீரமே அடைந்தான் ஜெய் அனுமான்
நாளும் நன்மை புரிந்தே நமக்கு
நலமே தருவான் ஜெய் அனுமான்

- சுந்தர

எங்கும் எதிலும் ராமன் என்று
எளிதாய் சொன்னான் ஜெய் அனுமான்
எல்லோர் மனதிலும் என்றும் இருந்து
ஏற்றம் தருவான் ஜெய் அனுமான்

- சுந்தர

மார்கழி மூலம் மகிழ்வுடன் தோன்றிய
மாபெரும் வீரனே ஜெய் அனுமான்
புத்தியும் பலமும் செல்வமும் வீரமும்
போற்றிட தருவான் ஜெய் அனுமான்

- சுந்தர

# மாமறைகள்

மாமறைகள் போற்றிநின்ற மதுராந்தகம்-நான்
மறைகளும் வலம்வந்த மதுராந்தகம்
- மாமறைகள்

சோழமன்னன் ஆட்சிசெய்த மதுராந்தகம்-குளிர்
சோலைகளின் நடுவில்நின்ற மதுராந்தகம்
- மாமறைகள்

திருவெண் காடுஎன்னும் மதுராந்தகம்-ஈசன்
திருவருள் தனைஈந்த மதுராந்தகம்
ஸ்ரீராமன் சீதாவின் கரம்பிடித்து-புஷ்ப
விமானம் தனில்வந்த மதுராந்தகம்
- மாமறைகள்

ஆறுமுகன் கோயில்கொண்ட மதுராந்தகம்-நல்
அருணகிரி பாடல்பெற்ற மதுராந்தகம்
ஸ்ரீதேவி ஸ்ரீனிவாச பெருமாளுடன்-என்றும்
சீராட்சி புரிந்துநிற்கும் மதுராந்தகம்
- மாமறைகள்

# வெண்காடு திருத்தலமே

வெண்காடு திருத்தலமே மதுராந்தகம்-நால்
வேதங்களும் வலம்வந்த மதுராந்தகம்
- வெண்காடு

சரித்திர புகழ்கொண்ட மதுராந்தகம்-சோழ
மன்னனும் ஆட்சிசெய்த மதுராந்தகம்
- வெண்காடு

வெண்காட்டு ஈசனுடன் மீனாட்சியும்-வந்து
வேதனை நீக்கிநின்ற மதுராந்தகம்
வெண்கொக்கு மந்தாரை காட்டிடையே-ஈசன்
எழிலாக காட்சிதந்த மதுராந்தகம்
- வெண்காடு

சதுர்வேதி மங்கலம் பெயருடனே-அழகு
வகுளா ரண்யம்என்னும் திருப்பெயரும்
இரண்டுமே ஒன்றாகி இணைந்ததினால்-அரசன்
இன்பமாய் பெயரிட்ட மதுராந்தகம்
- வெண்காடு

# எத்தனை சிறப்புகள்

எத்தனை சிறப்புகள் எங்கள் ஊருக்கு-அது
எல்லாமும் தெரியாது ரொம்ப பேருக்கு
- எத்தனை

திக்குக்கு ஒன்றாக ஒரு கோயிலாய்-நான்கு
திக்கிலும் உயர்ந்திருக்கு பெருங் கோயிலாய்
- எத்தனை

கிழக்கிலே வெண்காட்டு ஈசருடன்-அம்மை
மீனாட்சி உடன்நின்று அருள்புரிவாள்
மேற்கிலே ஸ்ரீராமன் சீதையுடன்-நின்று
ஏரியைக் காத்தே மனம்நிறைந்தான்
- எத்தனை

தெற்கிலே அருளாழி ஈசனுடன்-தேவி
ஏலவார் குழலியும் அருள்புரிவாள்
வடக்கிலே வடதிருச் சிற்றம்பலம்-என்னும்
கோயிலில் முருகனும் காட்சிதருவான்
- எத்தனை

..துராந்தகம் எங்கள்ஊர் மதுராந்தகம்
மதுராந்தகம் எங்கள்ஊர் மதுராந்தகம்

# இறைவன் என்பவன் ஒருவனடா

இறைவன் என்பவன் ஒருவனடா— நம்
இதயம் வாழும் தலைவனடா
பார்க்கும் காட்சிகள் எல்லாமே — அவன்
படைப்பின் ரகசிய சாட்சியடா — இறைவன்

சுற்றியே வந்திடும் காலங்கள் — நாம்
சுகம்பெற அமைந்த கோலங்கள்
அனைத்தும் இறைவனின் ஜாலங்கள் — அதை
அறிந்தால் வருமே பெருநலங்கள் — இறைவன்

கடலும் வானும் அவன் விரிப்பு — எந்த
காலமும் புரியும் புன்சிரிப்பு
என்றும் நமக்கு சுகம் தருமே — நம்
எண்ணத்தில் எளிதாய் வலம் வருமே — இறைவன்

படைப்பினில் பேதம் கிடையாது — அதை
பார்த்திட நமக்கோ புரியாது
ஆண்டவன் படைப்புக்கு நிகரேது — அவன்
அடிமலர் பணிந்தால் குறையேது — இறைவன்

# மனதுக்கு தெய்வம் மனசாட்சி

மனதுக்கு தெய்வம் மனசாட்சி — அதை
மதித்து நடந்தால் சரியாச்சி
மனமே இறைவனின் திருக்கோயில் — நல்ல
மாண்புகள் நிறைந்த அருட்கோயில் ... மனதுக்கு

தன்னை அறிந்தால் உயர்வாகும் -- இந்த
தரணியில் அதுவே சரியாகும்
'நான் என நினைப்பது தவறாகும் -- என்றும்
நல்லதே நினைக்க உயர்வாகும் -- மனதுக்கு

நினைவுகள் என்பது சரியானால் -- வரும்
நிகழ்வுகள் யாவும் சத்தியமே
நேர்மை என்னும் பாதை செல்ல -- மனித
நேயம் வளரும் நித்தியமே -- மனதுக்கு